# உங்கள் குழந்தை நன்றாக எடை போடுவதற்கு சமவிகித ஊட்டச் சத்து அத்தியாவசியமானது.

குழந்தைகள் சும்மா எடை போட்டால் மட்டும் போதாது. அவர்கள் 'சரியான' முறையிலே எடை போட வேண்டும். குறைவாகவும் கூடாது, மிகவும் அதிகமாகவும் கூடாது. குழந்தைகள் 'சரியான' அளவில் எடை போட வேண்டுமானால் தசைகளையும், திசுக்களையும் வளர்ப்பதற்கும் ரத்த விருத்திக்கும் உதவக் கூடிய **புரோட்டீன்கள்** தேவை.

இந்த புரோட்டீன்களைப் பெறுவதற்குச் சிறந்த வழி **ஊட்டச் சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த உணவைத் தர** வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு **4 மாதங்கள் ஆன பிறகு** பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு உங்கள் குழந்தைக்குத் தேவைப்படுகிறது.

எனவேதான் தாய்மார்கள் **செரிலாக்கைத்** தேர்ந்தெடுக்கின்றனர். ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவான செரிலாக்கில் புரோட்டீன்கள் செறிந்துள்ள இரண்டு முக்கிய பொருட்களான பாலும் கோதுமையும் உள்ளன. கொழுப்புச் சத்து, கால்சியம் ஆகிய சத்துக்களும் சம அளவில் கலந்துள்ளன. மேலும் இதற்கு வைட்டமின்கள் A, D, E, B-காம்ப்ளெக்ஸ் மற்றும் C பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு, செரிலாக் இப்போது நெஸ்லேயின் **புரட்சிகரமான புதிய Z-வகை என்ஸைமேட்டிக் முறைப்படி** தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகிறது.

செரிலாக் மிக எளிதில் ஜீரணமாகிவிடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் செரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு புரோட்டீன்கள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை 'சரியான' முறையிலே எடை போடுவதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த திட உணவு இது.








இலவசம். செரிலாக் பேபி கேர் புத்தகம்

உங்கள் குழந்தையின் வயது/பிறக்கக் கூடிய தேதி, உங்களுக்கு விருப்பமான மொழி ஆகிய விவரங்களை எங்களுக்கு எழுதுக: செரிலாக், தபால் பை எண் 31, புது தில்லி - 110 055.

**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக் அனுகூலம்.**

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே, தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.



நிறைந்த
நிறைவாகி
நினைவாக
நெஞ்சத்தில்
நிலையாக
ஒன்றிய
நடமாடிய
தெய்வம்.



ராஜகோபாலன்

சென்னை நகர் முழுவதுமே ரௌடிகளின் ராஜ்யம் பெருகி விட்டதோ என்று எண்ணும்படி தகவல்கள் வருகின்றன. கடைகளை மிரட்டிப் பணமோ, பொருளோ வசூல் பண்ணும் கும்பல், பேட்டைக்கு இரண்டு, மூன்றாவது இருக்கிறது. தாலி பறிப்பு, செயின் அறுப்பு, வீடு புகுந்து கொள்ளை, கொலை என்று சரமாரியாகப் பத்திரிகைகள் பட்டியலிட, எதிர்க்கட்சிகளும் ''சட்டம் - ஒழுங்கு கெட்டுப் போச்சு!'' என்று அறிக்கை விடுகின்றன.

இது போதாதென்று மத்திய அரசு ''தமிழ்நாட்டில் குற்றங்கள் பெருகி விட்டன'' என்று அறிவிக்க, வெகுண்டெழுந்த ஜெ. புள்ளி விவரத்தைப் போட்டு, ''மற்ற மாநிலங்களை விட இங்கே மிகவும் குறைவுதான்!'' என்று மறுப்பறிக்கை விட வேண்டியதாயிற்று.

இருப்பினும், ''சென்னை நகரத்தில் இரவில் தனியாகச் செல்வதற்குப் பயமாக இருக்கிறது. புறநகர்களிலோ பகலிலேயே பயமாக இருக்கிறது'' என்பதுதான் பல பெண்களுடைய கூற்றாக இருக்கிறது! உண்மை நிலை என்ன?

சென்னை நகரத்தில் சில ஏரியாக்களில் குறிப்பாக, ஐஸ் ஹவுஸ், திருவல்லிக்கேணி, ராயபுரம் பகுதிகளில் அமைதி கெடுவதற்குக் காரணம், பேட்டை தாதாக்கள் தான். வீரமணி, மாலைக்கண் செல்வம், பாக்ஸர் வடிவேலு போன்ற ''தாதாக்கள்'' ''உள்ளே'' இருந்தாலும் வெளியில் அவர்களுடைய ஆட்கள் அடிதடி கொலைகளில் இறங்கி, நகரை உலுக்கிக் கொண்டுதானிருக்கிறார்கள்.

''எங்க கமிஷனர்தான் ஸார் தைரியமாக வீரமணியைக் குண்டர்கள் சட்டத்தில் உள்ளே தள்ளினார். கள்ளச் சாராய சாம்ராஜ்யவாதிகள், ரவுடிகள், கொள்ளையர்கள் என ஏகப்பட்டோர் குண்டர்கள் சட்டத்தில் அடைக்கப்பட்டுள்ளனர்'' என்றார் போலீஸ் அதிகாரி ஒருவர்.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக குண்டர்கள் சட்டத்தில் பிடிபட்ட சிலர் சட்டத்தின் சந்து பொந்துகளில் புகுந்து தப்பி விடுகிறார்கள். சிலருக்கு ஆளும் அரசியல்வாதிகளின் ஆதரவும் இருக்கிறது. ''ஒருவரை குண்டர்கள் சட்டத்தில் உள்ளே தள்ளினால் ஏகப்பட்ட சடங்குகள் செய்ய வேண்டும். நிறைய

# சென்னை நகரில் ரௌடிகள் ராஜ்யமா?

தஸ்தாவேஜு வேலை இருக்கிறது. வழக்கமான சிவப்பு நாடா காரணமாக அரசின் உள்துறை இலாகாவில் கோப்பு உறங்கி விட்டால் அவ்வளவுதான்! இதை மோப்பம் பிடிக்கவென்றே கில்லாடி வக்கீல்கள் இருக்கிறார்கள். அவர்கள் கோர்ட்டில் ஆஜராகி, சம்பந்தப்பட்டவர்கள் வெளியே வரக் காரணமாகி விடுகிறார்கள்'' என்றார் அந்த அதிகாரி. இந்தச் சூழ்நிலையில் கோர்ட் கண்டனத்துக்கும் ஆளாகிறது அரசு.

கிட்டத்தட்ட 40 லட்சம் மக்கள், சென்னையின் புறநகர், மற்றும் அதையொட்டிய போலீஸ் சரகத்தில் வாழ்கிறார்கள். எனவே, செங்கை - எம்.ஜி.ஆர். மாவட்டம் கிழக்குப் பகுதி போலீஸாரின் தோள்களில் அதிகச் சுமை ஏறுகிறது. ஆனால் போலீஸின் எண்ணிக்கையோ 2000தான். அதாவது 20,000 பேருக்கு ஒரு போலீஸ் என்ற விகிதாசாரத்தில் இருக்கிறது. போதாததற்கு கால் ஒடிய மணிக்கணக்கில் டிரில் வாங்கும் முக்கியஸ்தர்கள் பந்தோபஸ்துக்கே பாதி நேரம் போய் விட்டால், மீதி நேரத்தில் ''அக்கடா'' என்று ஓய்வு எடுக்கத்தான் தோன்றுமே தவிர, கொலைகளைத் துப்பறிவதற்கோ, குற்றங்களை விசாரிப்பதற்கோ உடலும், மனதும் ஒத்துழைக்காது!

புறநகர் இப்படியிருக்க, சென்னையில் சட்டம் - ஒழுங்கு பற்றி கமிஷனர் ராஜகோபாலன் என்ன சொல்கிறார் என்று தெரிந்து கொள்வதற்காக அவரைச் சந்தித்தோம். விரல் நுனியில் உள்ள புள்ளி விவரங்களைப் பட்டியலிட்டார் :

''1993-ம் வருடம், எந்த ஒரு காரணத்திற்காகவும் மாநகர போலீஸார் துப்பாக்கிச் சூடு நடத்தவில்லை. இதற்குக் காரணம், பொறுமையைக் கடைப்பிடித்து, திட்டமிட்டு, அமைதியான முறையில் பேச்சு வார்த்தைகள் மூலமாகவே பல சென்ஸிடிவான விஷயங்களுக்குத் தீர்வு கண்டதுதான். சென்னை போலீஸுக்கு இது ஒரு பெருமையான விஷயம்.

''நகரின் மக்கள் தொகைக்கேற்ப போலீஸின் எண்ணிக்கை அதிகரிக்கவில்லை. கிட்டத்தட்ட 50 லட்சம் பேர் வாழும் சென்னையில் 10,000 போலீஸார்தான் இருக்கிறார்கள். டெல்லியில் 48,000. பம்பாயில் 28,000. எண்ணிக்கை குறைவாக இருக்கிறதென்று நாங்கள் மெத்தனமாக இருந்து விடவில்லை.

''போன ஆண்டு (93) 93 கொலைகள் நடந்துள்ளன. பெரும்பாலானவை தனிப்பட்ட காரணங்களுக்காகவே நடந்துள்ளன. அவற்றில் 88 கொலைகளில் துப்புத் துலக்கி, ஆட்களைக் கைது செய்திருக்கிறோம். அதே சமயத்தில் டெல்லியிலும், பம்பாயிலும் முறையே 203 மற்றும் 475 கொலைகள் நடந்துள்ளன. 92ல் சென்னையில் 174 கலவரங்கள் நடந்தன. ஆனால் 93ல் அவை 115 ஆகக் குறைந்து விட்டன. 17 கற்பழிப்புச் சம்பவங்கள் 92ல் நடந்தன. அதுவே 93ல் 12 ஆகக் குறைந்து விட, இதிலும் ஒன்பது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்து விட்டோம். 93-ல் பல்வேறு வகையில் திருடு போன சொத்துக்களின் மதிப்பு, சுமார் மூன்று கோடி ரூபாய். வழக்குகளைத் தீவிரமாக விசாரித்துக் கொள்ளையர்களைக் கைது செய்தது மட்டுமல்லாமல், சுமார் இரண்டு கோடி மதிப்புள்ள சொத்துக்களையும் மீட்டிருக்கிறது காவல் துறை.

''93-ல் மட்டும் 369 பேரைக் குண்டர்கள் சட்டத்தில் உள்ளே தள்ளியிருக்கிறோம். கடந்த 13 வருடங்களில் இதுதான் அதிகபட்சம். அயோத்தியா குப்பம் வீரமணி, குள்ள ராஜேந்திரன் போன்றவர்கள் இந்தச் சட்டத்தின்படி உள்ளே இருக்கிறார்கள். மதுவிலக்கு, பெண்களுக்கெதிரான குற்றங்கள், வாகன திருட்டுக்கள் ஆகியவற்றில், தீவிரமாக வழக்குப் பதிவு செய்தது மட்டுமல்லாமல், விசாரித்து, மேல் நடவடிக்கையும் எடுத்து வருகிறோம். 92ல் 281 செயின் பறிப்பு சம்பவங்கள் நடந்துள்ளன. 93ல் அது 206 ஆக குறைந்து விட்டது. இதில் பாதிக்கு மேற்பட்டவற்றில் திருடர்களைப் பிடித்து விட்டோம்.

''இப்படி சொல்லிக் கொண்டே போகலாம். நாளிதழ்கள் பரபரப்புக் கருதி வெளியிடும் செய்திகள் ஒரு தவறான தோற்றத்தை உருவாக்கலாம். ஆனால் சென்னைப் போலீஸைப் பொறுத்தவரையில், எவ்வளவோ இடர்ப்பாடுகள் இருப்பினும், பொது மக்கள் சேவையில் தன்னை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்டுள்ளது. மக்கள் எங்கள் மேல் முழு நம்பிக்கை வைத்திருக்கிறார்கள்'' என்கிறார் ராஜகோபாலன்.

- ப்ரியன்

## அடுத்த இதழில்...



வை. கோவின் சிறப்புப் பேட்டி!

# மருந்துக்கும் தேவை; மாட்டுக்கும் தீவனம்!

● சௌந்திரி



ஓட்டப்பந்தயத்தில் பங்கேற்கிறான் ஓர் இளைஞன். சோர்வடைகிறான். பாக்குப் பொட்டலம் போல் சிறிதான ஒரு பாக்கெட் குளுகோஸை உரித்து வாயில் போட்டுக் கொள்கிறான். புதிய சக்தி பெற்று ஓடி, முதலாவதாக வருகிறான்! ''என்னுடைய சக்தியின் ரகசியம் இதுதான்'' என்று சொல்லி குளுகோஸ் பாக்கெட்டைக் காட்டுகிறான். இப்படி டீவி விளம்பரங்கள் வந்தால் வியப்பில்லை.

குளுகோஸ் பல்வேறு பெயர்களில் விற்கப்பட்டாலும் அதன் அடிப்படையான சர்க்கரைச் சத்து உடனடியாக உடலுக்குச் சக்தி அளிக்கக்கூடியதே. சர்க்கரையை விட மிக எளிதாக கிரகிக்கப்பட்டு ரத்தத்தில் கலக்கிறது.

அதனால்தான் நோயாளிகளுக்கும் சோர்வு நீக்க ''குளுகோஸ் கொடுக்கலாம்'' என்று சொல்கிறோம். (நீரிழிவு நோயாளிகள் கதை வேறு.)

இந்த குளுகோஸ் எதிலிருந்து வருகிறது தெரியுமா? ஏழைகளின் உணவான மரவள்ளிக் கிழங்கிலிருந்துதான்! சாலை ஓரத்தில் பார்த்திருப்பீர்களே, புகையப் புகைய எண்ணெய்யில் சீவிப் போட்டு, லேசாகக் காரம் தூவி சாப்பிடப்படும் சிப்ஸ்! மலையாளத்துச் சேட்டன்மார்கள் மரச்சீனி என்று விளிப்பதும் இதைத்தான். மரச்சீனி அப்பளாம் ஒரு தடவை ருசித்தால் பிறகு நினைக்கும்போதெல்லாம் நாவில் நீர் ஊறும்.

ஜவ்வரிசி பாயஸம் நிச்சயமாகச் சாப்பிட்டிருப்பீர்கள்; அல்லது ஜுரத்தின் போது ஜவ்வரிசி கஞ்சியாவது! அந்த ஜவ்வரிசி தயாரிக்கப்படுவது மரவள்ளிக்கிழங்கிலிருந்துதான்.

அப்புறம் ஸ்டார்ச் பவுடர். மருந்துவத் துறையின் உயிர்நாடியே ஸ்டார்ச்தான். தவிர, ஸாஸ், ஐஸ்கிரீம், புட்டிங் என்று பல வகையான உணவு வகைகள், நெசவுத் துறை, காகிதத் தயாரிப்பு, பசை, சோப்பு என்று பல்வேறு துறைகளிலும் பயனாகும் ஸ்டார்ச் எங்கிருந்து வருகிறது என்று நினைக்கிறீர்கள்? மரவள்ளிக்கிழங்கு? அதே! அதே!

மரவள்ளிக்கிழங்கு என்றால் ''என்ன அது?'' என்று கேட்பார்கள் சேலத்தில். டிப்பிக்கிழங்கு என்றும் டிப்பி மாவு என்றும் சொன்னால்தான் புரியும் அந்த மாவட்டத்தில்! இங்கே, டிப்பி மாவு வியாபாரத்தில் கொடிகட்டிப் பறப்பவர்கள் சௌந்திரி சகோதரர்கள். வியாபாரம் தந்த வெற்றியானது, அகமதாபாத்தில் ஒரு பெரிய ரசாயனத் தொழிற்சாலையையே நிறுவ இவர்களுக்கு ஊக்கமளித்தது. (ரித்தி அண்டு சித்தி ஸ்டார்ச் அண்டு கெமிகல்ஸ்.)

சகோதரர்களில் ஒருவரான சம்பத்ராஜ் சௌந்திரியைச் சந்தித்தோம். டிப்பி மாவு வியாபாரத்தில் ஆண்டொன்றுக்குச் சுமார் நாலு லட்சம் லாபம் சம்பாதிப்பவர்கள் இவர்கள்!

''நாங்கள் ராஜஸ்தானைச் சேர்ந்தவர்கள். மஞ்சள் வியாபாரத்துக்காகக் கடப்பா சென்ற சமயம், அங்கே சேலம் வியாபாரிகள் சிலர் வெள்ளைப் பவுடருக்குக் கத்தை கத்தையாகப் பணம் பெற்று, மனம் கொள்ளா சந்தோஷத்துடன் திரும்புவதை எங்கள் தகப்பனார் பார்த்தார். விசாரிக்கப் போனதில்தான் டிப்பி மாவின் மகாத்மியம் புரிந்தது'' என்றார் சம்பத்ராஜ்.

தந்தை சேலத்துக்கு வந்து டிப்பி மாவு வியாபாரம் தொடங்க, மகன்கள் அதை வளர்த்து, தழைக்கச் செய்திருக்கிறார்கள்.

சேலத்தின் தட்பவெப்ப நிலை மரவள்ளிக் கிழங்குப் பயிருக்கு ஏற்றது. உணவாக மட்டுமே பயன்பட்டு வந்த இதிலிருந்து பால் எடுக்கும் தொழில் சுமார் 80 ஆண்டுகளுக்கு முன் தொடங்கியது. பாலிலிருந்து இயந்திரங்கள் உதவியுடன் ஸேகோ பவுடர் என்ற பெயரில் மாவு தயாரிக்கிறார்கள்.

மகாலக்ஷ்மி ஸேகோ தொழிலகத்துக்குள் நுழைந்தால் மரவள்ளிக் கிழங்கு, பெண்களுக்கும் ஏராள வேலை வாய்ப்புத் தருவதைக் காணலாம். நெருக்கமாக



★ மருந்துத் தயாரிப்பு முதல் மாட்டுத் தீவனம் வரை...

அமர்ந்து தோல் சீவுகிறார்கள்.

''நடுவில் இருக்கும் தின்மை ஓரத்திலும் இருக்க வேண்டும், அதுதான் நல்ல கிழங்கு'' என்று ஒரு கிழங்கை ஒடித்துக் காட்டுகிறார் தொழிலக உரிமையாளர் செல்வகுமார்.

சுத்தம் செய்யப்பட்ட கிழங்கு ஏராள பற்களுடன் கூடிய உருளைச் சக்கரங்கள் இடையே அகப்பட்டு நசுங்க, வெள்ளைப் பால் பெரிய பெரிய தொட்டிகளில் நிரம்புகிறது. தொட்டித் துவாரங்களின் வழியே பாலிலிருந்து பிரியும் தண்ணீர் வடிய, மாவு கீழே படிந்து விடுகிறது.

மாவின் ஈரத்தைப் போக்கி, கெட்டிப் பதத்துக்குக் கொண்டு வர, அதனைக் குவியலாக்கி, மனிதர்களைக் கொண்டு மிதித்துத் துகைக்கச் சொல்கிறார்கள். இது கொஞ்சம் அருவருப்பாகத் தோன்றினாலும் ''கால்களைச் சுத்தமாக அலம்பிய பிறகே இக் காரியத்தில் இறங்குவார்கள்'' என்று உறுதி அளிக்கிறார் செல்வகுமார்.

கெட்டிப்பட்ட மாவை வறுத்து, வெண்மை நிறம் ஏற்றி, பட்டு மென்மையுடன் வியாபாரத்துக்கு அனுப்புகிறார்கள். ஜவ்வரிசி, ஸ்டார்ச், குளுகோஸ் என்று பலரகப் பொருள்களாக உருமாறுகிறது.

இப்படி மாவு உற்பத்தியில் ஒரே ஒரு சங்கடம்தான்; 'காடாறு மாசம் நாடாறு மாசம்' என்பது போல், கோடையில் விளைச்சல் இராது. தொழிலகம் தூங்கும். நிரந்தர வேலை வாய்ப்பு இல்லை.

இதற்காக இப்போது பலர் சோளத்திலிருந்து ஸ்டார்ச் எடுக்கும் முறையில் இறங்கியிருக்கிறார்கள். இது தரத்திலும் உயர்ந்தது.

''ஸ்டார்ச் தயாரிக்கும் போது மிருந்து போகும் சக்கை கூட மாட்டுத் தீவனமாகி விடுகிறது. எனவே இந்தத் தொழிலில் வீண் போவது என்ற பேச்சுக்கே இடமில்லை'' என்று பெருமைப்படுகிறார் செல்வகுமார்.

– சத்தியப்பிரியன்

## வானொலியில் 'அலை ஓசை'!



அமரர் கல்கியின் ''அலை ஓசை'' நாவல், வானொலியில் நாடக பாணியில் படிக்கப்படுகின்றது. ஜனவரி 7 ம் தேதி ஆரம்பமாகியுள்ளது.

ஒவ்வொரு வாரமும் நாவல் படிக்கப்படுவதுடன் உரையாடல்கள், உணர்ச்சி பூர்வமாக நாடக உருக்கொடுத்துப் பேசப்படுகின்றன. பல பிரபல நடிகர், நடிகையர் பங்கேற்கின்றனர். வெள்ளிக்கிழமை தோறும் காலை 7.45 முதல் 8 மணி வரை இதனை சென்னை 'ஏ' அலைவரிசையில் கேட்கலாம்.

''கல்கி'' ரசிகர்களுக்குக் கல்கண்டுப் பொங்கல்தான்!



★ ராஜகுமாரன் : ஐந்தாண்டுகளுக்குப் பிறகு நதியா

# பிரபு-100

ராஜகுமாரன். பொங்கலன்று வெளியாகும் இந்தப் படம், பிரபுவின் நூறாவது படம் மாத்திரமல்ல; இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் செலவு செய்து, சிவாஜி பிலிம்ஸ் தயாரிக்கும் மூன்றாவது பெரிய பட்ஜெட் படம்.

''பிரபுவின் நூறாவது படம், மிகவும் பிரம்மாண்டமான முறையில் தயாரிக்கப்பட வேண்டுமென்று இரண்டாண்டுகளுக்கு முன்பே நாங்கள் திட்டமிட்டோம். பட்ஜெட் பற்றிக் கவலைப்படாமல் இருக்க வேண்டுமென்றால், அதை நாங்களேதான் தயாரித்தாக வேண்டும் என்று முடிவு செய்து, வேலையைத் துவங்கினோம்!'' என்கிறார் பிரபுவின் அண்ணன் ராம்குமார்.

இந்த பிரம்மாண்டம் கருதித்தான், மிகப் பெரியதொரு நட்சத்திரப் பட்டாளத்தையே ராஜகுமாரனில் அணிவகுக்கச் செய்திருக்கிறார்கள். நதியா, மீனா என்று இரண்டு கதாநாயகிகள். திருமணம் செய்து கொண்டு அமெரிக்காவில் செட்டிலாகி விட்ட நதியா, ஐந்தாண்டுகள் இடைவெளிக்குப் பிறகு, ஒரு விடுமுறைப் பயணமாக இந்தியாவுக்கு வந்ததையறிந்து, ராஜகுமாரனில் வளைத்துப் போட்டு விட்டார்கள். இந்தப் படத்தை முடித்த கையோடு, நதியா மீண்டும் அமெரிக்காவுக்கே போய் விட்டதால், ஒரு நீண்ட இடைவெளிக்குப்



பிறகு, நதியாவைப் பார்க்கிற வாய்ப்பு இந்தப் படத்தின் மூலம்தான் ரசிகர்களுக்குக் கிடைக்கப் போகிறது!

காமெடிக்கு, செந்தில் - கவுண்டமணி ஜோடியோடு, வடிவேலுவையும் சேர்த்திருக்கிறார்கள். இந்தப் படத்தின் டைரக்டர் ஆர். வி. உதயகுமார் சுமார் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்பே பட வேலைகளைத் துவங்கி விட்டார்.

''ராஜகுமாரன் முழுக்க முழுக்கப் பொழுதுபோக்குப் படம்தான் என்றாலும் படத்தின் ஹைலைட் மஞ்சு விரட்டுத்தான் என்பதால், அதற்காக அலங்காநல்லூரிலிருந்து காளைகளையும் ஆட்களையும் வரவழைத்து மிகுந்த ரிஸ்க்குடன் படமாக்கி

* ராஜகுமாரன் - மிகுந்த சிரமத்துடன் ஜல்லிக்கட்டு



வோம்!'' என்கிறார் ஆர்.வி. உதயகுமார்.

''இத்தனை முன்னேற்பாடுகளுக்கும் காரணம், 'ஒரு படம் பிரம்மாண்டமானதாக மட்டும் இருந்தால் போதாது; அவார்டு வாங்குகிற அளவுக்கு இருந்தாலும் போதாது; அது எல்லா ஜனங்களையும் சென்றடைகிற கமர்ஷியல் படமாகவும் இருக்க வேண்டும்!' என்று எங்களிடம் அப்பா (சிவாஜி) அடிக்கடி சொல்வது தான்!'' என்கிறார் ராம்குமார்!

**ரா**ஜகுமாரனின் இசையமைப்பாளர் இளையராஜா. இது பிரபுவின் நூறாவது படம் என்பதால், ரசிகர்களின் எதிர்பார்ப்புக்கேற்ப, அதையொரு வெற்றிப் படமாகத் தந்தாக வேண்டுமே என்கிற 'டென்ஷன்' சிவாஜி பிலிம்ஸாருக்கு இருக்கிற மாதிரி, இளையராஜாவுக்கும் இருக்கிறதா?

ராஜகுமாரனுக்கு ரீ-ரெக்கார்டிங் செய்து கொண்டிருந்த இளையராஜாவிடம் இந்தக் கேள்வியைக் கேட்ட போது, ''இது பிரபுவுக்கு நூறாவது படமாக இருந்தாலும் எனக்கு வழக்கமான படங்களில் இதுவும் ஒன்றுதானே!'' என்று சப்தமில்லாமல் சிரித்தவர், ''இருந்தாலும் பிரபுவின் பெரும்பாலான வெற்றிப் படங்கள், நான் இசையமைத்த படங்கள்தான்! சொல்லப் போனால் நான் இசையமைத்து, கங்கை அமரன் டைரக்ட் செய்த 'கோழி கூவுது' படம்தான் பிரபுவுக்கு முதன் முதலில் இருநூறு நாட்களைத் தாண்டி ஓடிய படமாக அமைந்தது!'' என்கிறார் இளையராஜா.

இளையராஜா சொல்வது போல், பிரபுவின் ஏழாவது படமான 'கோழி கூவுது' 202 நாட்கள் ஓடிச் சாதனை புரிந்தது என்றாலும் மீண்டும் அது மாதிரியொரு சாதனைக்காகச் சுமார் ஆறு ஆண்டுகள் பிரபு காத்திருக்க வேண்டியிருந்தது. ஆம்; அவரது ஐம்பத்தொன்பதாவது படமான 'அக்னி நட்சத்திரம்'தான் மறுபடியும் இருநூறு நாட்கள் ஓடிச் சாதனை புரிந்தது. அதன் பிறகு, எண்பத்தாறாவது படமாக வெளிவந்த 'சின்னத் தம்பி'தான் 229 நாட்கள் ஓடி, பிரபுவின்

உயர்ந்தபட்ச சாதனையானது. சிறந்த நடிகருக்கான தமிழக அரசு விருதினையும் பெற்றுத் தந்தது. 'மனசுக்குள் மத்தாப்பூ' நூறு நாள் ஓடிய படம்தான் என்றாலும் சிறந்த நடிகருக்கான 'சினிமா எக்ஸ்பிரஸ்' விருதைப் பெற்றுத் தந்தது.

நூறாவது படம் வெளியாகும் இந்தச் சூழ்நிலையில் பிரபுவின் சாதனை என்பது என்ன? வெள்ளி விழாக் கொண்டாடிய படங்கள் ஆறு. நூறு நாட்கள் ஓடிய படங்கள் முப்பத்தேழு. ஆயினும் பிரபு நடித்தால் போட்ட முதலுக்கு எந்த நிலையிலும் நஷ்டமில்லை என்கிற கருத்து சினிமா வட்டாரத்தில் நிலவுவதால், பட எண்ணிக்கைக்கு எப்போதுமே பிரபுவுக்குப் பஞ்சமிருப்ப



* 1986 – பாலைவன ரோஜாக்கள்

தில்லை.

''பிரபு பெங்களூரில் ஸ்கூல் படித்துக் கொண்டிருந்தபோதே மற்றவர்களைப் போல் மிமிக்ரி செய்தும் டான்ஸ் ஆடியும் காட்டுவார். நான் சிவாஜி அவர்கள் குடும்ப நண்பர் என்பதால், என்னிடம் மிகவும் ஃப்ரீயாக பிரபு அவற்றையெல்லாம் செய்து காட்டுவார். எனக்கு அப்போதே பிரபுவை நடிக்க வைக்க வேண்டும் என்ற எண்ணம் வந்து விட்டது. ஆயினும் படிப்பு கெட்டு விடக் கூடாது என்பதற்காகக் காத்திருந்து, கல்லூரிப் படிப்பு முடிந்த பிறகு, 82-ல் 'சங்கிலி' படத்தில் அறிமுகம் செய்தேன். என் நம்பிக்கை வீண்போகவில்லை!'' என்கிறார் பிரபுவை முதன் முதலில் அறிமுகம் செய்த டைரக்டர் சி.வி. ராஜேந்திரன்.

''பிரபுவின் ஆரம்ப காலப் படங்களைப் பார்த்த போது, சிவாஜி அவர்கள் இளைஞராக இருந்த போது நடித்த படங்களைப் பார்ப்பது போல்தான் இருந்தது. இருந்தாலும் பிறகு, பிரபு மெல்ல மெல்லத் தம்மை மாற்றிக் கொண்டு விட்டார். இப்போது அப்படியில்லை!'' என்கிறார் இளையராஜா.

இளையராஜாவின் கருத்தில் பிரபுவின் ரசிகர்களுக்குக் கூட உடன்பாடு இருந்துதான் ஆக வேண்டும். பிரபு, ஆரம்ப காலத்தில் தமக்குக் கிடைக்கும் கேரக்டர்கள் பற்றியெல்லாம் அலட்டியே கொள்ளாமல் சகட்டுமேனிக்குப் படங்களை ஒப்புக் கொண்டது கூட அவரது நடிப்புக்கான தனி பாணி அமையாமல் போனதற்கு முக்கிய மானதொரு காரணம் என்றே சொல்லலாம். அப்பா சிவாஜியும் சினிமாவில் இவர் நடிக்க ஆரம்பித்ததும், ''எல்லாவற்றையும் நீயே அடிபட்டுத் தெரிந்து கொள்; நான் சொல்லித் தருவதை விட அனுபவப் பாடம்தான் சிறந்தது'' என்று கூறி விட்டார்.

''ஆரம்ப காலத்தில் நிறையப் படங்களில் பிஸியாய் நடிப்பதுதான் எனக்கு மாபெரும் விஷயமாகப் பட்டது. பிறகுதான் நடிப்பு என்பது அத்தனை சுலபமானது அல்ல என்று புரிந்து கொண்டேன்!'' என்று பிரபுவே ஒப்புக் கொள்கிறார்.

''நீங்கள் நடிப்பதற்குக் இணைறிய காட்சி ஏதேனும் உண்டா?''

''ஓ! நானும், அப்பாவும் இணைந்து நடிக்க வேண்டிய ஒரு காட்சி. அவர் பப்ளிக் பிராசிகியூட்டர். நான் வில்லனின் வக்கீல். அந்தக் காட்சியில் நடிக்கும் போது, எனக்கு நடிக்கவே வரவில்லை. காரணம் தெரியாத பயம். ரீ டேக் மேல் ரீ டேக் ஆகிக் கொண்டிருந்தது. பக்கத்து செட்டில் இருந்து அப்பாவைப் பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்த ரஜினி, இத்தனையையும் பார்த்துக் கொண்டு அமைதியாய் உட்கார்ந்திருந்தார். பன்னிரெண்டாவது டேக்தான் ஓ.கே. ஆனது. அப்போது, 'எனக்கு நடிக்கத் தெரியவில்லையே!' என்று உள்ளூர அழுதிருக்கிறேன். என்னைத் தட்டிக் கொடுத்து விட்டு

# Kalki Shopping Page

வாடிக்கையாளர்களுக்கு
எங்கள் உளம் கனிந்த
புத்தாண்டு,
பொங்கல் நல்வாழ்த்துக்கள்!

எங்களது மாதாந்திர சிறுசேமிப்புத்
திட்டத்தில் சேர்ந்து நகைகளை
வாங்கிப் பயன்பெறுங்கள்!

**தரமான தங்கம்
வெள்ளி நகைகளுக்கு
இன்றே அணுகுங்கள்**

## JAIN JEWELLERY

DIAMOND, GOLD & SILVER

109, USMAN ROAD,
T. NAGAR,
MADRAS - 600 017.
PHONE : 444135; 445018

---

எங்களிடம் தரமான
எவர்சில்வர், பித்தளை,
அலுமினியம் மற்றும் வீட்டு
உபயோகத்திற்குத் தேவை
யான அனைத்துரக பாத்திர
வகைகள் மற்றும் குக்கர்,
கேஸ் ஸ்டவ், பிளாஸ்டிக்
பொருட்களைச் சிறந்த
முறையில் நியாயமான
விலையில் கிடைக்கும்.
சிறந்த சேவை நிறைந்த தரம்

## பொன்னி ஸ்டோர்ஸ்

நெ. 37, பாண்டி பஜார்,
சென்னை - 17.
Phone : 446106
(எங்களுக்கு வேறு எங்குமே
கிளைகள் இல்லை)

---

எங்களிடம் தரமான
எவர்சில்வர், அலுமினியம்,
பித்தளை பாத்திரங்கள்
நல்ல தரம் உள்ளதும்
நியாயமான விலையிலும்
கிடைக்கும்.
மற்றும் மிக்ஸி, பிரஷர் குக்கர்,
காஸ் ஸ்டவ்களும் கிடைக்கும்.

குறிப்பு : சுமித் மிக்ஸி,
பிரஸ்டீஜ் குக்கர், பிரிமியர் குக்கர்,
கேஸ் ஸ்டவ் தரமான முறையில்
ரிப்பேர் செய்து தரப்படும்.

## முருகன் ஸ்டோர்ஸ்

95, உஸ்மான் ரோடு,
தி. நகர், சென்னை - 600 017
தொலைபேசி : 445444

---

**தரமான சிதம்பரம்
கவரிங் நகைகள் பல
வருடங்கள்
உபயோகித்த பின்பும்
திரும்பப் பணம் பெறும்
நிபந்தனையுடன்
கிடைக்கும்.**

## RASI GOLD COVERING WORKS

109, USMAN ROAD,
T. NAGAR, MADRAS - 600 017.

20, PURASAWALKAM
HIGH ROAD,
MADRAS - 600 007.



" 'நேர்மையும் நாணயமும் கொண்டவர் கள் பாண்டவர்களா, கௌரவர்களா' என்ற பட்டிமன்றத்துக்கு அரசியல் தலைவரை நடு வராக அழைத்தது தப்பாயி டுச்சு..."

"ஏன்...?"

"கௌரவர்கள்தான் சிறந்தவர்கன்னு தீர்ப்பு வழங்கிட்டாரு. கேட்டா 'அங்கே நூறு வோட்டு இருக்கே. பாண்டவங்கிட்டே பிசாத்து அஞ்சே வோட்டுதானேன்னு சொல் றார்!"

- வி. பன்னீர்செல்வன்



"அனல் பறக்கத் தலைவர் பேசு வார்னு விளம்பரப்படுத்தியது உண் மைதான். அதுக்காக இப்படியா எல்லா ரும் பக்கெட் நிறைய தண்ணீர் எடுத் தூக்கிட்டு கூட்டத்துக்கு வர்றது...?"

- நல்லூர் வைத்யா



"அண்ணே! இப்போ எந்த அணி யிலே இருக்கறீங்கன்னு பத்திரிகை அலுவலகத்திலிருந்து கேட்கிறாங்க!"

"கொஞ்ச நேரத்துக்கு முன்னே சொல்லிட்டேனே!"

"இது கடைசி எடிசனாம்... இப்போ உங்க நிலையைக் கேட்கிறாங்க...!"

- எம். பர்வதவர்த்தினி

ரஜினி சொன்னார் : "சிவாஜி சார் கூட இந்த சிவாஜிராவ் நடிச்ச போது, பதினஞ்சாவது டேக் ஓ.கே. ஆயிருக்கு!"

ஆரம்ப காலத்தில் சில படங்கள் வரி சையாகத் தோல்வியடைந்த போது, அமெரிக்காவில் இருக்கும் தமது சித்தப்பா வீட்டுக்குப் போய் விட்டார் பிரபு. அங்கே சில காலம் அமைதியாக இருந்து ஆலோ சித்தார். கதைகளைக் கேட்டறிந்து, கேரக் டர்களைத் தேர்ந்தெடுத்து நடிக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அப்போது கூட சில படங்கள் எதிர்பார்த்த அளவுக்கு வெற்றி பெறவில்லை. சின்னத் தம்பியோ யாருமே எதிர்பார்க்காத அளவுக்கு வெற்றி பெற் றது.

"சின்னத் தம்பியின் சூப்பர் ஹிட் டுக்கு நீங்கள் நினைக்கும் காரணம் என்ன?"

"மிக மிக அடிப்படையான காரணம் பி.வாசு சாருடைய ஸ்கிரிப்ட். அது தவிர அத்தனை பேருடைய நடிப்பு, இளைய ராஜா கொடுத்த சூப்பர் ஹிட் பாடல்கள், ரசிகர்கள் அந்தப் படத்தின் கேரக்டர் களுடன் ஒன்றிப் போனது என்று சொல்லிக் கொண்டே போகலாம்."

"சிவாஜி போல, நிறைய மாறு பட்ட கேரக்டர்களை ஏற்று நடிக்க வேண் டும் என்று உங்களுக்கு ஆசையில் லையா?"

"ஏன் இல்லை? வாய்ப்பு வர வேண் டும். 'சந்தனத் தேவன்' என்று ஒரு கேரக்டர். அதில் நடிப்பேன்."

"உடம்பைக் குறைத்துக் கொள்ள வேண்டும் என்பதில் நீங்கள் ஏன் ஆர்வம் காட்டக் காணோம்?"

"நான் உடம்பைக் குறைக்க வேண்டும் என்று யாரோ சொன்ன போது, 'வேணாம்பா! யானை இளைச்சா அசிங் கமா இருக்கும்!' என்று கமெண்ட் அடித்தார் காந்திமதி. என்னைப் பொறுத்தவரை அது சரிதான். சிறு வயது முதலே என் உடல்வாகு இப்படித்தான். பள்ளியில் படிக்கும் போது, கிரிக்கெட், ஹாக்கி, நீளத்தாண்டல், ஓட்டம் என்று அத்தனையிலும் பங்கேற்றுப் பரிசுகள் வாங்கிக் குவித்திருக்கிறேன்."

"விளையாட்டில் சூரர்களாய் இருக் கும் மாணவர்கள் படிப்பில் அத்தனை கட்டி யாய் இருக்க மாட்டார்களே?"

"உண்மைதான். நான்காம் வகுப்பில் இரண்டு வருஷம் படித்தேன். அப்புறம் எல் லாம், பாஸ் மார்க் வாங்கி, அடுத்த கிளாஸ் போய் விடுவேன். லயோலாவில் படித்த போது, ஈட்டி எறிதலில் நான் சாம்பியன். அப்பாவுக்கு, என்னை ஈட்டி எறிதலில்

பெரிய சாம்பியனாக்கி, ஒலிம்பிக்ஸுக்கு அனுப்ப வேண்டும் என்று - ஆசை. பெரியப்பாவுக்கோ, நான் போலீஸ் அதிகாரி ஆக வேண்டும் என்று ஆசை. நானோ, கடைசியில் சினிமாவுக்கு வந்து விட்டேன்!''

**ரா**ஜகுமாரன், பிரபுவின் முழுத் திறமையையும் வெளிக் கொண்டு வரும் ஒரு படமா? ''பிரபுவின் முழுத் திறமையையும் இதுவரை எந்த டைரக்டரும் வெளிக் கொண்டு வரவில்லை என்றுதான் நான் சொல்லுவேன். அவனால் இன்னும் திறமையாகச் செய்ய முடியும். இப்போது டைரக்டர் கே. பாலசந்தர் அவர்கள், முதன் முதலாகப் பிரபுவை வைத்து தமது 'டூயட்' படத்தை இயக்குகிறார். அவர் நிச்சயம் இதுவரை இல்லாத அளவுக்கு பிரபுவின் திறமைகளை வெளிக்கொண்டு வருவார் என்று திடமாக நம்புகிறேன்!'' என்கிறார் பிரபுவின் அண்ணன் ராம்குமார்.

டைரக்டர் கே. பாலசந்தரும் ''பிரபு இதுவரை ஏற்று நடிக்காத வித்தியாசமான ஒரு கேரக்டர்தான் 'டூயட்'டில் நான் கொடுத்திருக்கும் கேரக்டர். அதுவும் பிரபுவுக்குப் பொருந்துகிற ஒரு கேரக்டர்!'' என்கிறார்.

''நான் நூறு படங்களில் நடித்ததை முழுமையாக மறந்து விட்டு, இப்போதுதான் முதல் படத்தில் நடிக்கிறோம் என்கிற உணர்வில்தான் பாலசந்தர் அவர்கள் படத்தில் நடிக்கிறேன்!'' என்று பிரபு சொல்வதே, படங்களின் எண்ணிக்கையில் மாத்திரமல்ல; நடிப்பாற்றலிலும் முன்னேறிக் கொண்டே வருகிறார் என்பதற்குச் சரியான சாட்சி!

- எஸ். சந்திரமௌலி;
ஸ்டூடியோவாசன்.
படங்கள், புள்ளி
விவரங்கள் உதவி :
பிலிம் நியூஸ் ஆனந்தன்

● தென்னிந்திய சினிமா வர்த்தக சபையில் பதிவுசெய்யப்பட்டுள்ள சில சினிமா தலைப்புகள் : முன்னாள் முதலமைச்சர், போலீஸ்னா என்னடா நெனைச்சே? புலிக்குப் பிறந்தது, இதுதாண்டா போலீஸ் - பாகம் -2, உடம்பு எப்படி இருக்கு?, மணிரத்னம், என் இனிய தமிழ் மக்களே, மடிசார் மாமி, மயில்சாமி கவுண்டர், பில்லி நல்ல தம்பி, ரௌடி எம்.எல்.ஏ., உன்னோன் ஜயா, வாத்யார் தொப்பி.



✱ சுஜாதா

● சென்னை ஃபிலிம் சொஸைட்டியின் சார்பில் 'சலனம்' என்றொரு சினிமா (இருமாத

# மெட்ராஸ் பேல்பூரி

இதழ் வருவது அநேகமாக யாருக்கும் தெரிந்திருக்காது. மாயாபஜார் டான்ஸ், கார் ரேப்பு ஸ்டில்கள், அமர்க்களம், தூள், சூப்பர் போன்ற 'ஸ்டாண்டர்டு' விமர்சனங்களெல்லாம் இல்லாமல் வெகு தீவிரமாக உலக சினிமா பற்றியும், தொழில்நுட்பம் பற்றியும், சினிமா மேதைகள் பற்றியும் உபயோகமான கட்டுரைகளை வெளியிடுகிறார்கள்.

● சுஜாதா, இந்துமதி, குஷ்பு, எஸ்.வி.சேகர், என்று ஒரு டஜன் பிரபலங்கள் தோன்றும் படம் ஒன்று தயாராகி வருகிறது. என்ன படம்? விவேகானந்தா இன்ஸ்டிடியூட்டின், ஆங்கிலம் கற்றுத் தரும் புத்தகத்துக்கான விளம்பரப்படம்தான். உருவாக்கியிருப்பவர் கேவடி கண்மணி புகழ் வஸந்த்.

தொகுப்பு : மௌனஷ்மி



✱ இந்துமதி



✱ குஷ்பு

# பொங்கல் ரிலீஸ்...



ராஜகுமாரன்
வை.கோ.
ஸ்டாலின்
அந்த ரோல்ல எனக்கு நடிக்கத் தெரியாதா? நான் பார்த்துக்கிறேன்...
இந்தா, டியூப் புடிச்சுக்க... சமாளிச்சுக் கரை சேரு...
பிரதமர் தலையீடு
ஐயோ! மகாநதி... இழுத்துக்கிட்டுப் போகுதே...
ம், இந்த சேதுபதி.IPS பத்தி உனக்கு ஒண்ணுமே தெரியல... ஜனாதிபதிக்கு 9 பக்க ரகசிய அறிக்கையா அனுப்புறே?... இரு, இரு உன்னை.....
எப்பவுமே நம்ம வீட்ல விசேஷங்க...
கவர்னர் உரை தேவை!
ஆளுநரை அவமதிக்காதே!



ஓம்
கல்கி



1994
ஜனவரி 16
மலர் : 52
இதழ் : 25
ஸ்ரீமுக
தை 3

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. – பாரதியார்.

# குதிரை, கழுதை ஆன கதை!

சுதந்திரம் கிடைத்த போது பஞ்சகல்யாணிக் குதிரையாக இருந்த நமது ஜனநாயகம், இப்போது குட்டிச்சுவர் ஓரக் கழுதையாகி விட்டது! மத்தியிலும் சரி, மாநிலங்களிலும் சரி ஒரே கதைதான். கர்த்தபவாரின் கச்சேரிதான்!

ஜே.பி.ஸி. அறிக்கை வெளிவந்த பிறகு, ஒரு தார்மிக மன உறுதியுடன் ராஜினாமா செய்யும் துணிவு மன்மோகன் சிங்குக்கு மட்டுமே இருந்தது. (ஏற்கப்படாதது வேறு விஷயம்.) சங்கரானந்த் ஆகட்டும், ராமேஷ்வர் தாக்குர் ஆகட்டும் பதவியில் ஒட்டிக் கொள்வதே பிரதானம் என்ற நோக்கில், 'நான் எதற்கு ராஜினாமா செய்வதாம்?' என்ற கேள்வியையே எழுப்பியுள்ளனர். ராஜினாமா செய்தால் ஏற்கப்பட்டு விடும் என்ற பயம்தான் அடிப்படைக் காரணம்! குற்றம் புரிபவர்களும் பதவியில் தொடர்வது என்றால், ஜே.பி.ஸி. விசாரணை எதற்கு? அதற்கு லட்சக்கணக்கில் செலவிடுவதும் மாதக் கணக்கில் நேரம் ஒதுக்குவதும் என்னத்திற்காக? எல்லாமே கண் துடைப்பு நாடகமாகி விடுகிறது.

ஏற்கெனவே 7 எம்.பிக்கள் தமது கட்சியிலிருந்து காங்கிரஸில் போய்ச் சேர்ந்த போது 'ஆ! ஊ!' என்று கூக்குரல் எழுப்பிய அஜித்சிங், இன்று கூண்டோடு கைலாசம் என்பது போல் ஒட்டுமொத்தமாகத் தமது கட்சியைக் காங்கிரஸுடன் இணைத்து விட்டார். இடையில் பி.ஜே.பி., முலாயம்சிங் யாதவ் ஆகியோருடன் குலவிப் பார்த்து ஒன்றும் பயனில்லாமல் போகவே, பசை இருக்கும் இடம் பார்த்து ஒட்டிக் கொண்டார்! ''புத்தாண்டுப் பரிசு'' என்று காங்கிரஸ் மகிழ்கிறது. மத்தியில் நிலையான அரசு அமைவதில் சற்று மகிழலாம் என்றாலும், ஜனநாயக மரபுகளும் பண்புகளும் நிலையற்றதாகி விட்டதில் அந்த மகிழ்ச்சி, இகழ்ச்சியாகவே மாறி விடுகிறது.

கர்நாடகாவைப் பாருங்கள். எப்படியாவது மொய்லி அரசைக் கவிழ்த்து விட வேண்டும் என்ற ஒரே நோக்கில் கச்சை கட்டிக் கொண்டு வருவது எதிர்க்கட்சி அல்ல; ஆளும் காங்கிரஸ் கட்சியினரேதான்! மொய்லியைக் கவிழ்க்க என்ன காரணம் என்றால், சரியான விளக்கம் இல்லை. அவர் காங்கிரஸ் கட்சிக் கொள்கைகளுக்கு விரோதமாக இயங்குகிறாரா? அல்லது லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்களில் சிக்கி விட்டாரா? நிர்வாகத் திறனில் பின்தங்கி இருக்கிறாரா? ஏதொன்றுமில்லை. நேர்மையாளராக இருந்து, அவர் மக்களிடம் நல்ல பெயர் வாங்குவதே அவரது சகாக்களுக்குப் பிடிக்கவில்லை! பொறாமை ஒருபுறம்; பதவி ஆசை மற்றொருபுறம் அவர்களை ஆட்டுவிக்கிறது. ஒரு கட்சிக்குள் எம்.எல்.ஏக்கள் அத்தனை பேருமே முதல்வராக எண்ணி, கோஷ்டி சேர்ப்பது போன்ற அசிங்க அரசியல் வேறு என்ன இருக்க முடியும்?

தமிழகத்திலோ, ஆளுனரைத் தமக்குப் பிடிக்கவில்லை என்பதை முதல்வர் வெளிப்படையாகவே காண்பித்துக் கொண்டு வருகிறார். ஆளுனரின் உரை இல்லாமலே தமிழக சட்டமன்றத் தொடரை நடத்தி முடிக்க எண்ணுகிறார். இதற்கு ஆட்சேபணை எழுப்பும் காங்கிரஸ் எதிர்க்கட்சி எம்.எல். ஏக்கள் குண்டுக்கட்டாக வெளியேற்றப்படுகின்றனர். பல்கலைக் கழகத் துணைவேந்தர் நியமனங்களில் தமக்கு அளிக்கப்பட்ட பட்டியல் திருப்தி தராததால், தேர்வுக் கமிட்டியை ஆளுவர் திருத்தி அமைக்கப் போக, இப்போது முதல்வர் தாமேதான் இனி எல்லா பல்கலைக் கழகங்களுக்கும் வேந்தர்; ஆளுவர் அல்ல என்ற நிலையை உருவாக்கச் சட்டம் இயற்ற முற்பட்டிருக்கிறார். ஆளுனருக்கும் முதல்வருக்கும் இடையே உள்ள இந்த நிஜப் போர் (பனிப்போர் அல்ல) டாக்டர் சொக்கலிங்கம் ஷெரீஃபாக பதவி ஏற்பதைக் கூடத் தாமதப்படுத்தியிருக்கிறது.

ஜனநாயகம் என்பது தலைக்குத் தலை நாட்டாண்மை என்பதல்ல. தலையோடு தலை சேர்ந்து ஆலோசித்து, நல்ல முடிவுகளுக்கு வருவதேயாகும். இதைப் புரிந்து கொள்ளாமல், நம் தலைவர்கள் ஒவ்வொருவரும் தான்தோன்றித்தனமாக நடந்து கொண்டு, தமது அரசியல் அறிவின் அரைவேக்காட்டுத் தனத்தை உலகறியச் செய்து வருகிறார்கள். நமது நாடே சர்வதேச அரங்கில் சிரிப்புக்கிடமாகி வருகிறது.

எந்த ஒரு காரியத்திலும் 'நான்' என்ற பார்வையை ஒதுக்கி, 'நாம்' என்ற மனப்பக்குவத்தை வளர்த்துக் கொண்டு, பிறரையும் – எதிர்த்தரப்பினரையும் – உற்சாகப்படுத்தி அணைத்துக் கொண்டு போவதிலேதான் ஜனநாயகத்தின் ஜீவனே இருக்கிறது. ''மாற்றான் தோட்டத்து மலருக்கும் மணமுண்டு'' என்ற அண்ணாவின் வாசகம் உணர்த்துவது இதைத்தான்.


மங்களம்
பொங்குக!
DUGAR
KUM KUM
DEPOSIT
உங்கள் அன்புக்குரிய வாழ்க்கைத் துணையின் பேரில், துகரின் ஏதேனும் ஒரு டெபாஸிட் திட்டத்தில் 31 ஜனவரி 1994 முன் முதலீடு செய்து, துகரின் தனித்தன்மையான 'மங்கள' வாழ்த்துக்களைப் பெறுங்கள்.
• HIRE PURCHASE • LEASING • PROPERTY DEVELOPMENT • PUBLIC DEPOSITS • MERCHANT BANKING • FOREIGN EXCHANGE
தலைமை அலுவலகம்: 'துகர் டவர்ஸ்', 123, மார்ஷல்ஸ் ரோட், எழும்பூர்,
சென்னை-600 008. ☎ 828 35 35 (10 lines) Tlx: 041-6670 DUGR IN
Fax: 044-8281122. Grams: DUGFINANCE.

## SCHEME I – FIXED DEPOSITS

| PERIOD | RATE OF INTEREST PER ANNUM | INTEREST PAYABLE |
|---|---|---|
| 1 YEAR | 14% | MONTHLY |
| 2 YEARS | | |
| 3 YEARS | | |
| 4 YEARS | 14.16% | QUARTERLY |
| 5 YEARS | | |

MINIMUM OF Rs. 3,000/- AND IN MULTIPLES OF Rs. 1,000/-

## SCHEME II – CUMULATIVE DEPOSITS

| INITIAL DEPOSIT | AMOUNT PAYABLE AFTER | | | | |
|---|---|---|---|---|---|
| | 1 YEAR | 2 YEARS | 3 YEARS | 4 YEARS | 5 YEARS |
| Rs. 1,000/- | Rs. 1,150/- | Rs. 1,321/- | Rs. 1,518/- | Rs. 1,745/- | Rs. 2,006/- |
| ANNUAL YIELD | 15% | 16.05% | 17.27% | 18.62% | 20.12% |

MINIMUM OF Rs. 1,000/- AND IN MULTIPLES OF Rs. 1,000/-

**Particulars required to be specified as per Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules, 1977.**

(a) Name of the Company — DUGAR FINANCE INDIA LIMITED
(b) Date of Incorporation — 20th May, 1981.
(c) Business — Hire Purchase, Leasing, Property Development, Merchant Banking, Foreign Exchange & Portfolio Management.
(d) Branches — Mount Road, Mylapore, T. Nagar, Adayar (Madras), Bangalore, Calicut, Coimbatore, Ernakulam, Gudur, Madurai, Nellore, Salem, Secunderabad, Tirupati, Visakhapatnam.
(e) Management — The Company is managed by its Managing Director under the supervision of the Board.
Grams: DUGINVEST
(f) Names, Addresses and occupation of the Directors

| Name | Address | Occupation |
|---|---|---|
| DR. C. ANNA RAO (Chairman) | Chelikani Anna Rao Road, Sripuram Colony, Tirupathi – 517 507. | Former Chairman, Board of Trustees, Tirumala Tirupathi Devasthanams |
| Shri B. LALCHAND MARLECHA (Vice-Chairman) | 30, Mannarswami Koil Street, Royapuram, Madras – 600 013. | Merchant & Banker |
| Shri C.R. RAO | 'White House' Gudur – 524 101 (A.P.) | Company Director |
| Shri V. RAMACHANDRAN | 24, Nungambakkam High Road, Madras – 600 034. | Senior Advocate |
| Shri C.V. KRISHNAIAH | 'Sree Krupa', Nehru Nagar, Gudur – 524 101 (A.P.) | Mine Owner & Company Director |
| Shri R. RAMAKRISHNAN | 'Hari', 14, Seethamma Road, Madras – 600 018. | Industrialist & Former Member, Rajya Sabha |
| Shri M.K. PANDURANGA SETTY | 'Prashanth', 27, Bull Temple Road, Bangalore – 560 004. | Industrialist & Company Director |
| Shri K.S.T. PANI | 'Suseelam' 45, Mandapam Road, Kilpauk, Madras – 600 010. | Chief General Manager, (Retd.) SBI & Company Director |
| Shri T. PADAM DUGAR | 21, Commander-in-Chief Road, Madras – 600 105. | Company Director |
| Shri N. TARACHAND DUGAR (Managing Director) | 21, Commander-in-Chief Road, Madras – 600 105. | Industrialist & Banker |

(g) & (h) Profits of the Company, before and after making provision for Tax and Dividends, declared by the Company for the three financial years immediately preceding the date of advertisement.

| Year ended | Profit before provision for tax (Rs. in lakhs) | Profit after provision for tax (Rs. in lakhs) | Dividend Declared |
|---|---|---|---|
| 30-06-1991 | 48.99 | 48.99 | 25% |
| 30-06-1992 | 81.55 | 79.26 | 25% |
| 30-06-1993 | 92.95 | 91.90 | 25% |

(i) Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets.

| Liabilities | 30-06-93 (Rs. in lakhs) | 30-06-92 (Rs. in lakhs) | Assets | 30-06-93 (Rs. in lakhs) | 30-06-92 (Rs. in lakhs) |
|---|---|---|---|---|---|
| Share Capital | 300.00 | 300.00 | Fixed Assets | 590.74 | 532.34 |
| Reserves & Surplus | 111.59 | 94.36 | Investment | 64.69 | 27.00 |
| Secured Loans | 625.77 | 664.49 | Current Assets | 1856.32 | 1610.21 |
| Unsecured Loans | 1303.37 | 924.81 | Loans & Advances | 212.74 | 199.33 |
| Current Liabilities & Provisions | 442.50 | 400.77 | Miscellaneous Expenditure | 58.81 | 15.55 |
| | 2783.33 | 2384.43 | | 2783.33 | 2384.43 |

(j) Contingent liabilities as on 31.03.93

| | 30-06-93 (Rs. in lakhs) | 30-06-92 (Rs. in lakhs) |
|---|---|---|
| (a) Estimated amount of contracts remaining to be executed on capital account and not provided for | 1.00 | 3.00 |
| (b) Counter guarantees to Bankers. | 5.00 | 5.00 |
| The Company can raise by way of deposits under the directions. | 3517.80 | 3788.12 |
| Aggregate of deposits actually held | 1303.37 | 924.81 |

(k) **The Company has no overdue deposits other than unclaimed deposits.**

(l) The Company hereby declares
(i) that the Company has complied with the applicable provisions of the directions of Reserve Bank of India.
(ii) that the compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India, and
(iii) that the deposits accepted by the Company will be unsecured and rank pari passu with other unsecured liabilities.

This advertisement is issued on the authority and in the name of the Board of Directors of the Company. The text was approved by the Board of Directors on 23rd December 1993 and a copy duly signed by a majority of the Directors has been filed with the Regional Office of Reserve Bank of India, Department of Financial Companies, Bangalore.

By Order of the Board
For DUGAR FINANCE INDIA LIMITED
**N. TARACHAND DUGAR**
*Managing Director*

Madras
23rd December 1993

# DUGAR
## FINANCE INDIA LTD

கிளைகள்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| • அடையார் | ☎ 4917700 | • கூடூர் | ☎ 830 | • பெங்களூர் | ☎ 5584422 |
| • மௌண்ட் ரோடு | ☎ 831888 | • மதுரை | ☎ 33663 | • கோழிக்கோடு | ☎ 63344 |
| • மைலாப்பூர் | ☎ 72256 | • நெல்லூர் | ☎ 27576 | • கோவை | ☎ 37867 |
| • தி. நகர் | ☎ 441541 | • சேலம் | ☎ 68769 | • எர்ணாகுளம் | ☎ 369515. |
| • செகந்திராபாத் | ☎ 846006 | • திருப்பதி | ☎ 22990 | • விசாகபட்டினம் | ☎ 46581. |




◆ ஏதோ உள்ளங்கை அகலத்துக்கு ஒரு டயரி கொடுக்கப் போறீங்கன்னு பார்த்தா... அடேங்கப்பா! இத்தனை கனமாகவும் உயர்தரமாகவும் இருக்கும்னு எதிர்பார்க்கவேயில்லே, சார்! டாப் டக்கர்! கல்கியின் புதிய அல்லது புதுப்பித்துக் கொள்கிற சந்தாதாரர்கள் அதிர்ஷ்டசாலிகளே!

சென்னை - 7, ராகவன்.

◆ வித்தியாசமான திரைக்கதை அமைப்பு - பரபரப்பான சம்பவங்கள் மூலம், கவர்ந்திருக்கும் 'ஏர்போர்ட்' படத்தைத் தாறுமாறாக விமர்சித்திருக்கும் உமது விமர்சகரைப் பறக்கும் விமானத்திலிருந்து கீழே தூக்கிப் போட வேண்டும்!

வேலாயுதம்பாளையம், எம். சம்பத்.

◆ அனைவருமே 'ஏர்போர்ட்'ஐ புதுமை, விறு விறுப்பு என்று பாராட்டிக் கொண்டிருக்கையில், சற்று மாறுதலான... அதே தருணத்தில் நடுநிலையான.. விமர்சனம் மூலம் மனத்தைக் கொள்ளை அடித்து விட்டார் ஆர்.வி.ஆர்.

திருச்சி - 8, நவீனி.

◆ 'கிரேஸி கமெண்ட்ஸ் - 1994' குறும்படி யோசனைகள் படித்து மகிழ்ந்தேன். ஒரு கட்டத்தில் அவரே குறும்பி, அடுத்த ஒலிம்பிக்ஸ் 'அட்லாண்டா' என்பதற்குப் பதில் 'மிலோல்' என்று, முடித்த கதையைச் சொல்லியதைப் படித்துச் சிரித்தேன்!

பொன்மலை, ஆர். பிரகாஷ்.

◆ கிரேஸி மோகனுக்கு ஒரு ரூபாய் சம்பளத்தில் அரசு உத்யோகம் தந்தால், அவ்வளவுதான்! மனிதர் ஜெட் வேகத்தில் கோடீஸ்வரர் ஆகி விடலாம்! அவ்வளவு வேலைக்குத்தான் கோடிக் கணக்கில் கிம்பளம் வாங்கலாமே!

மதுரை - 16, வி.பி. மகாலி.

◆ அரசியல்வாதிகளிடத்தான் நேர்மைக்குப் பஞ்சம். உங்களுக்குமா ஜோக்ஸ் பஞ்சம்? இந்த வாரம் எண்ணி ஆறே ஜோக்ஸ். இருந்தாலும் கிரேஸி மோகனின் கமெண்ட்ஸை வைத்துச் சமாளித்துக் கொண்டேன்.

பவித்திரமாணிக்கம், ஆர். பாஸ்கரன்.

◆ சென்னாரெட்டி - ஜெயலலிதா ஹாக்கி போட்டி; நரசிம்மராவின் கவலை; சதீஷ்சர்மா ஊழல் விவகாரம்; இக் கார்ட்டூன்கள் இன்றைய அரசியல் நடப்புகளைத் தெளிவாகவும் அதே சமயம் நகைச்சுவையோடும் விளக்கியிருந்தன. பாராட்டுக்கள்.

கும்பகோணம், கோ. பாலமுருகன்.

◆ தலையங்கம் எப்போதும் போல் சிறப்புற அமைந்திருந்தது. ஆனால் ஒன்று. மன்மோகன் சிங் வகுத்த பொருளாதாரக் கொள்கை வெகு தூரம் முன்னேறி வந்து விட்டதால் இன்னும் அவர் இருந்துதான் அதனைக் கொண்டு செலுத்த வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அன்றியும் அவரே சொல்லியுள்ளது போல அரசியலில் எவரும் இன்றியமையாதவர் அல்லர்.

சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

◆ 'மன்மோகன் சிங்கின் அலட்சியப் போக்கு எனினும் அவர் மீது குற்றமில்லை' என்ற உங்கள் தலையங்கக் கருத்தை நான் மனமார ஏற்றுக் கொள்கிறேன்.

ஏத்தாப்பூர், செவேகா.

◆ 'மரியாதை' சிறுகதை அருமை. சந்தர்ப்ப சூழ்நிலை காரணமாக, ராகவிக்கு வேலை வாங்கிக் கொடுக்கவில்லையென அலட்சியப் படுத்தியதால், அந்த வாய்ப்பை, என்றோ செய்த உதவிக்கு மறக்காமல் மரியாதை கொடுக்கும் டைபாலுக்கு வாங்கிக் கொடுக்க நினைத்தது நியாயமே.

கோவை - 6, ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

◆ "அழகிய சென்னை - 2000" உள்ளபடியே நல்லவிதமாக மாறினால் தமிழக மக்களுக்கு நிச்சயம் நன்மை பயக்கும்! சந்தேகமில்லை! "வைகையாத்தா" சிறுகதை நெஞ்சை விட்டு அகல வெகு நேரம் பிடித்தது!"

மதுரை - 10, பி. ராஜசேகரன்.

◆ 'வைகையாத்தா' சிறுகதை மனத்தில் மகிழ்ச்சி வெள்ளத்தைக் கரை புரண்டோடச் செய்துவிட்டது. எளிய நடையாக இருந்தாலும் இயல்பாகவே இருந்தது.

பாண்டிச்சேரி - 3, வசந்தராஜ செல்வன்.


வொர்ஸ்டட்
சூட்டிங்ஸ்
அளிக்கும்
சொகுசான ஃபால்.
மற்றும் உணர்வு.
இப்போது
சேஸாரி ப்ரிமீயம்
வொர்ஸ்டட் சூட்டிங்ஸ்
பறைசாற்றும் இந்த
வித்தியாசத்தை.
மிருதுவான மற்றும்
மென்மையான
உணர்வை வழங்கும்
சூட்டிங்ஸ். அணிய
லேசானது. மிகச் சிறந்த
பகட்டு மற்றும் நேர்த்-
தியான ஃபினிஷ்.
சேஸாரி ப்ரிமீயம்
வொர்ஸ்டட் சூட்-
டிங்ஸ் நேர்த்தியான
உல் மற்றும் தரமான
பாலியெஸ்டர்
இணைந்தது. ஃபால்
மற்றும் அணியும்
உணர்வில்
நிகரற்றது.
அ றி மு க ம்
ப் ரி மீ ய ம்
சேஸாரி
வொர்ஸ்டட் சூட்டிங்ஸ்
பாம்பே டையிங்

# குழந்தை

**சுப்ரமணியன் ரவிச்சந்திரன்**

**வீ**டு வெறிச்சிட்டுத் தான் போய் விட்டது. அடுத் தடுத்து இருவரும் போனதும் வெறுமை நன்றாகவே தாக் கியது.

கோபி பின்வங் கழுத் தில் கையை அணைப்புக் கொடுத்து ஈஸிசேரில் கண் மூடிப்படுத்திருந் தான். 'மொகலே ஆஸம்' இந்திப் பாட்டு ரிகார்டரில் மென்மையாக ஒலித்துக் கொண்டிருந்தது.

இவ்வாறு விச்ராந்தி யாய் மீண்டும் பாட்டு கேட் போம் என்று அவன் நினைத் தவனில்லை. போன மாதம் கூட அவர்கள் இருந்தார்கள்.

மன்னிக்கவும்... அவர் கள் யாரென்று இதுவரை சொல்லவில்லையா... சுதர் சன். கோபியின் அக்கா பையன். விசாலி, அண்ணன் மகள்.

இருவரும் ஏக தேசத்தில்தான் வந்து சேர்ந்தனர். அத்தானுக்கு அப்போது வடக்கே உத்தியோகம். மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை மாறும் குணம் கொண்டது. பைய னின் படிப்பை ஆங்காங்கே தொடர்வதை விட தாத்தா வீட்டில் இருக்கட்டும் என்ற காரணத்தால் இங்கே விட்டனர்.

விசாலி ஒன்றரை வயதுக் குழந்தையாக இருக்கையில் அண்ணனுக்கு வெளிநாடு போகும் வாய்ப்பு வந்தது. கிடைத்தற்கரிய வாய்ப்பு. மூன்று வருட காலம் இருந்தால் போதும். பிறகு தாயகத்தில் ஒரு வியாபாரம் ஆரம்பித்து ஓட்டி விடலாம். அப்பா இருக் கிறார். அம்மா இருக்கிறாள். தம்பி கோபி இருக்கிறான்.

கோபிக்கு ஆரம்பத்தில் சந்தோஷமா கவே இருந்தது. அவன் வேலையில் அவனா கவே கேட்டால் அன்றி மாற்றல் இல்லை. பிறந்தது தொட்டே இருந்து வரும் ஊர்..

**"ஏ**ண்டா... ஒரு எட்டு பாத்துட்டு வாயேன். இங்க இருக்கற வேலூர். வரலே வரலேங்கறாரு மாப்ளே. சுதர்சனம் காலேஜ்ல சேந்திருக்கானாம். என்னால ரொம்ப நேரம் பஸ்ல காலைத் தொங்க விட்டுப் போக முடியாது. ஒனக்கும் ரெண்டு நாளு லீவுதானே..."

- அப்பா, தலைமாட்டில் சொன்ன போது ஒன்றி யிருந்த 'மொகலே ஆஸம்' சிதறிப் போனது.

"அப்பிடியே மெட்ராஸ் போனா விசாலிக் குட்டியை யும் பாத்துட்டு வந்துட லாம்..." - அப்பாவுக்கு மகன், மகளைக் காட்டிலும் பேரப் பிள்ளைகள் மேல் பிரியம் அதிகம்.

அம்மா இரண்டு தூக்கு களை வைத்து விட்டுப் போனாள். ஆக, எல்லாம் தீர்மானம் செய்யப்பட்டு விட்டது. கோபி அலுப்புடன் டேப்ரிகார்டரை நிறுத்தி னான்.

**அ**ன்று ஆபீஸில் ஒற்றை ஆளாய்த் தவித்துப் போய் விட்டான் கோபி. சென்னையிலிருந்து புள்ளி விவரம் கேட்டு, கழுத்தில் கத்தி வைத்தது டெலிபோன். சூபரிண்டன்ட் விரட்டுவதற்கு அகப்பட்ட ஒரே நபர் கோபி தான். அவர் ஒன்று கேட்க இவன் ஒன்று எடுத்துக் கொடுக்க, மனிதர் காய்ச்சி விட்டார். அவருக்கு மூலவியாதி வேறு!

தளர்ச்சியுடன் வீடு திரும்பியவனின் கண்ணில் சுதர்சனமும் அப்பாவும் பட்டனர். அவர்கள் பேசுவது காதில் விழுந்தது.

"இல்ல தாத்தா... நாப்பது பேரை செலக்ட் பண்ணிருக்காங்க. யூனிஃபாரம் தைக்கணும், ஒயிட் அன்ட் ஒயிட்..."

"எதுக்கு யூனிஃபாரமாம்?" கோபி குறுக்கே புகுந்தான்.

"ஒனக்கு ஒண்ணுமில்ல நீ போ." அப்பா பதில் சொன்னார்.

"ஸ்கூல்ல என்.எஸ்.எஸ். கேம்ப்ல என்னை செலக்ட் பண்ணியிருக்காங்க மாமா..." - சுதர்சனம் தயங்கியபடி பதில் அளித்தான்.

"என்.எஸ்.எஸ்.னா... மரம் நடறது, ரோடு போடறது இதானே?"

"ஆமாம் மாமா..." சுதர்சனம் உற்சாக மானான். மாமாவுக்குத் தெரிந்திருக்கிறது. அநேகமாய் பர்மிஷன் கிடைத்த மாதிரி தான்.

"நீ என்ன பெரிய பயில்வானா... தொஞ்சான் பூனை தயிர் மத்தை நக்கற மாதிரி இருக்கே. வெயில்ல காஞ்சு மயக்கம் போட்டா யாரு பதில் சொல்றது? பேசாம படிக்கட்டு உருப்படியா ஊர் போய்ச் சேரு..."

கதர்சனத்தின் முகம் காற்றுப் போன பலூன் ஆனது.

''கோபி.. சின்னப் பையன் அவன். ஆசைப்படறான். ஏண்டா குறுக்க விழுந்து புடுங்கறே...'' அப்பா புகுந்து அலுத்துக் கொண்டார்.

''என்னப்பா நீ. அவனுக்கு ஒன்னு ஆச்சுன்னா?'' கோபி படபடத்தான்.

''ஐ நோ.. எல்லாத்துக்கும் நான் பதில் சொல்றேன். நீ வேலையைப் பாரு. சாயங் காலம் வாடா எலிகண்ட்ல ட்ரெஸ் எடுப் போம்'' என்றார் பேரனைப் பார்த்து.

கதர்சனம் சிரித்தான். கோபியைக் கேலி செய்வது போலிருந்தது. பற்களை நெறித்த படி உள்ளே போனான்.

''சித்தா... சித்தா...'' மேலே வந்து மோதிக் கால்களைக் கட்டிக் கொண்டாள் விசாலி. ஸ்பஷ்டமாய்ப் பேச்சு வரவில்லை. சித்தா என்றால் சித்தப்பா.

''ச்... ஆபீஸ்லேந்து வந்ததும் வராத துமா இப்பிடி விழக் கூடாதுன்னு சொல்லி யிருக்கேனில்ல. போடி அந்தப் பக்கம்!'' கன் னென்று இரைந்ததில் குழந்தை மிரண்டது.

''டேய் டேய்...'' அப்பா ஓடி வந்தார். ''பைத்தியமா புடிச்சிருக்கு ஒனக்கு! ஆசையா வர்ற கொழந்தைகிட்ட எப்பிடி நடந்துக்கறே!'' மிரண்ட குழந்தையை அணைத்துக் கொண்டார்.

''டயர்டா வர்றேன். மொட்டுன்னு வந்து மோதறா பாரு.''

''கொழந்தை வரலியேன்னு அவன அவன் ஏங்குவான். அதிசயமான சித்தப்பாடி ஒனக்கு...'' அப்பா குழந்தை மூலம் பதில் சொன்னார்.

'சித்தா சித்தா' என்று ரொம்ப நேரம் குழந்தை அழுது கொண்டிருந்தாள்.

''ஷ்... கம்னு இருக்கியா, ரெண்டு போடவா!'' - கண்களை உருட்டி அதன் முன் ஒற்றை விரலை நீட்டினான். ஸ்விட்ச் போட் டாற்போல அழுகை நின்றது.

நல்லவேளை, இடையில் ஞாயிறு இருக் கிறது.

சாப்பாட்டுக்குப் பின் ஃபைலைப் பிரித் தவனைக் கைகொட்டிச் சிரித்த கதர்சனத்தின் சப்தம் சாத்தது. டீ.வி.யில் சீரியல் ஓடிக் கொண்டிருக்கிறது.

''கதர்ஸன்...'' இரைந்தான். அவன் வர வில்லை. என்ன திமிர்! எழுந்து ஹாலுக்குப் போனான்.

''கூப்புட்டா காதுல விழாதா? அப்பிடி யென்ன டீ.வி? எல்லாம் வருதுல்ல...''

''டேய் டேய் வெறி புடிச்சவன் மாதிரி ஏன் கத்தறே? என்ன தப்பு பண்ணிட்டான்? இன்னும் இருவது நிமிஷம்...''

''அங்க ஆபீஸ் ஒர்க் பாக்க முடியாம ஒரே சப்தம். சப்தம் போடாம பாக்கற துன்னா பாக்கட்டும்.''

''ஆபீஸ் வேலைய ஆபீஸ்லயே செய் யறது. சாமியாரா இருக்கறவங்க எல்லாம்... ரொம்ப மோசமாப் போறேடா...''

''ச்சை..'' முணுமுணுத்தபடி திரும்பி னான். அப்பாவின் மேற்பார்வையில் குழந் தைகள் குட்டிச்சுவராகப் போகின்றன. கதர் ஸனத்திற்குப் பரீட்சைகள் வருகின்றன. அவனோ டீ.வியின் முன்...

ஒருவழியாய் டீ.வி. அமைதி பெற்றது. கால் மணி நேரம் பேப்பர்கள் சலசலக்கும் ஓசையைத் தவிர எதுவும் இல்லை. அலுப் புடன் ஆரம்பித்த வேலை சுவாரஸ்யம் தர ஆரம்பித்தது. அதில் மூழ்கிப் போனான்.

''வீட்டுக்குக் கொண்டு போயாச்சும் போட்டுக் கொண்டாங்க. ஹெட் ஆபீஸ்ல கொத்தறான்.''

''சார்.. இது என் சீட் இல்ல சார். பெருமாள் செக்ஷன்...''

''பெருமாள் லீவ்ல இல்லன்னா நான் ஏன் ஒங்க கிட்ட தர்றேன் கோபி? யாருக்காகவும் ஒர்க் நிக்கப் படாது..''

கட்டாய் வீட்டுக்கு எடுத்து வந்தான். அந்த ஆபீ சில் பிள்ளையார் கோயில் ஆண்டிதான் தானோ?



# இலவசமாக ஒரு ஈகிள் டயரி என்றால், வேண்டாமென்றா சொல்லப் போகிறீர்கள்?

- ஒரு வருட கல்கி சந்தா ரூ. 156/- செலுத்துவோருக்கும் மேலும் ஒரு வருடம், சந்தாவை நீட்டித்துக் கொள்ளும் தற்போதைய சந்தாதாரர்களுக்கும் ஓர் அழகிய, கணிசமான மதிப்புடைய ஈகிள் டயரி இலவசம்.
- வெளியூர் காசோலைகள் ஏற்பதற்கில்லை. மணிஆர்டர் அல்லது டிராஃப்ட், 'மேனேஜர், கல்கி' என்கிற பெயருக்கு அனுப்பவும்.
- இச்சலுகை, ஸ்டாக் உள்ள வரை அல்லது ஜனவரி 20 வரை மட்டும். முந்திக் கொள்வோருக்கு முன்னுரிமை.

கல்கி,
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 097.


''நித்தா...'' - விசாலி முதுகில் மோதி கழுத்தைக் கட்டியதில் நிலைகுலைந்து போனான். மடியில் இருந்த பேப்பர் சிதறியது. பேனாவின் முனை தரை தட்டி, இங்க் புள்ளிகள் தெறித்தன.

''சொல்றேனில்ல.. செய்வியா...?'' - படாரென்று நான்கு விரல்கள் முதுகில் பதிந்தன.

''ம்மா...'' விசாலி வீறிட்டாள்.

அப்பா குழந்தையை அள்ளிக் கொண்டு இவனை முறைத்தபடி போனார். ''நித்தா நித்தா'' என்று தாத்தாவிடம் நடந்ததை அழுதபடியே விவரித்த குழந்தை - அப்படியே தூங்கிப் போனது.

வேலை ஓடவில்லை அவனுக்கு. தான் அவசரப்பட்டு விட்டோம் என்று உணர்ந்தான்.

இரவு மீண்டும் குழந்தை அவனிடம் வந்த போது நெகிழ்ச்சி தட்டியது. தன் மீது போட்டுக் கொண்டு படுத்தான்.

தூக்கம் கண்களை இழுத்துக் கொண்டு போனது. ஏறக்குறைய தூங்கி விட்டான். சட்டென்று விழிப்புத் தட்டியது. வேட்டி ஈரமாயிருந்தது. குழந்தை தூக்கத்தில் ஈரம் பண்ணியிருக்கிறது.

''விசாலி, எழுந்திரு. சே.. மனுஷனைத் தூங்கக் கூட விடாம...'' உதறினான். சப்தம் கேட்டு அப்பா எழுந்து வந்தார். புரிந்து கொண்டார்.

முத்தம் கொடுத்துப் பேத்தியைக் கொண்டு போனார்.

கோபிக்குத் தூக்கம் வர நேரமானது. இந்த வீட்டில் நிம்மதியாய் இருந்தோம் என்பதே கிடையாது.

அக்கா வரவேற்றுச் செய்திகள் தெரிந்து கொண்டாள். அத்தான் வர இன்னும் நேரமாகும்.

''சுதர்சன் எங்க அக்கா?''

''அவனுக்கு ஆயிரம் ஃப்ரெண்ட்ஸ். என்ஜாய் பண்றான். வர்ற நேரம்தான்.''

சுதர்சனம், கோபி என்னும் மாமாவின் வரவால் பெரிதாய்ப் பாதிக்கப்படாமல், அவன் பாட்டிற்குச் சப்தமாய் டீ.வி.யை வைத்தான். விளம்பரங்களுடன் கூடப் பேசினான்.

இது என் வீடு. இங்கு யாரும் என்னை அடக்க முடியாது என்னும் சுதந்திர பாவம் அவனிடம் இருந்தது.

சப்தம் கோபிக்குத் தலையை வலித்தது.

''எக்ஸாம் எப்படா?''

''அதெல்லாம் மொத நாள் நைட்டே படிச்சுடுவான். அதுவெல்லாம் கெட்டி...'' அக்காதான் பதில் சொன்னாள். அவள் பதிலில் கோபியைக் குற்றம்சாட்டும் தொனி இருந்த மாதிரி பட்டது.

சுதர்சனம் அவனைக் குறைந்தபட்சம் கூட விசாரிக்காமல் விலகி நின்றது அறுத்தது.

அக்காவிடம் தன்னைப் பற்றி என்னெல்லாம் சொன்னாளோ...

"சுதர்சனம் இல்லாம வீடே வெறிச்னு இருக்கு" - கோபி அக்காவிடம் சொன்னான்.

"அதெல்லாம் கொழந்தைங்க அவங்கவங்க அப்பாம்மாகிட்டதான் இருக்கணும்..." - நச்சென்று அக்கா பேசினாள்.

விடைபெற்றுக் கிளம்பும் போது கோபிக்கு மனசு கனத்தது.

அண்ணன் ஊருக்கு பஸ் வந்து நின்ற போது போவதா வேண்டாமா என்னும் பரிசீலனையில் இருந்தான். பெற்றவர்க்குப் பிள்ளைகளின் மொழியே வேதம். இவ்வளவு வளர்ந்த பையன் நடந்து கொண்ட விதமே இப்படியெனில் சின்னப் பெண், விசாலி, என்ன சொல்லியிருக்கப் போகிறாளோ?

அண்ணனைச் சந்திக்கும் திராணியே போனதாய் உணர்ந்தான். பேசாமல் திரும்பி விடலாமா?

மனம் ஒன்றை நினைக்க, உடல் வேறொன்றைச் செயல்படுத்தியது. சென்னைக்கு டிக்கட் வாங்கியாகி விட்டது.

அண்ணி மட்டும்தான் இருந்தாள். அப்பாவும் மகளும் வெளியே போயிருக்கிறார்கள்.

"என்ன செஞ்சீங்க அந்தக் கொழந்தையை?" அண்ணியின் கேள்வியில் திண்டாடிப் போனான். சூசகமாய்க் கேட்பாள் என்று நினைத்தால் பட்டென்று போடுகிறாள்!

வறட்சியாய்ச் சிரித்தான். 'எழுந்து ஓடி விடுவோமா?'

"அப்படி ஒரு பேச்சு! சித்தா... சித்தான்னு.. ஒங்க அண்ணனே சொல்றாரு, பேருக்குத்தான் நான் அப்பா. மத்தபடி விசாலிக்கு அப்பா அவளோட சித்தா தான்னு..."

சட்டென்று உள்ளே ஏதோ உடைந்து கரைந்து போனது.

"எதச் செஞ்சாலும் எங்க சித்தா அப்பிடி பண்ணுவாரு. இப்பிடிக் கொஞ்சுவாரு. நா அங்க போறேன்னு ஒரோரு சமயம் ஒரே அடம். அப்பப்பா! கண்ட்ரோலே பண்ண முடியல..."

அண்ணி சொல்லிக் கொண்டிருக்கும் போதே 'சித்தா' என்று இரைந்தபடி அவன் மேல் விழுந்தாள் விசாலி. பூப்பந்து விழுந்தது போல் மெத்து மெத்தென்று. என்னவோ நினைத்துக் கொண்டவள் போல் விலகினாள் - 'இது சித்தப்பாவிற்குப் பிடிக்காது.'

கோபி புரிந்து கொண்டு அவளைத் தன்னோடு அணைத்துக் கொண்டான்.



# மசாலாப் படங்களின் காலம் மலையேறியாச்சு!

வட மாநிலத் தேர்தல்களில் மக்கள், எதிர்பார்ப்புக்களுக்கு மாறாகத் தங்கள் தனித்துவத்தைக் காட்டியது போலவே, இவ்வாண்டு வெளிவந்த இந்திப் படங்களுக்கு ஆதரவு தரும் விஷயத்திலும் நடந்து கொண்டிருக்கிறார்கள்! நூற்றுக் கணக்கில் படங்கள் திரைக்கு வந்தாலும், பாக்ஸ் ஆஃபீஸில் வெற்றி பெற்றவை இருபத்தைந்துக்கும் கீழேதான். இவற்றில் 'ருதாலி', 'ஜனா' 'ரோஜா', 'மாயா மேம் சாஹிப்' போன்றவை மசாலாப் படங்களிலிருந்து மாறுபட்டவை. மனத்திற்கு இதமூட்டும் இசைக்காகவே வெற்றி பெற்ற படங்கள்: 'ஹம் ஹைன் ராஹி ப்யார் கே', 'பாஜிகார்', 'ஆஷிக் ஆவாரா'.

காமெடிக்காகத் தனியாக ஒரு 'ட்ராக்' அமைத்து, அதில் காமெடியன்களைக் கையாளும் உத்தியும் இவ்வாண்டு கைவிடப்பட்டிருக்கிறது! படங்களில் வரும் ஹீரோ, ஹீரோயின்களே காமெடிப் பகுதியையும் கவனித்துக் கொண்டு விட்டனர்! இதற்கு, 'ஆங்கேன்', 'அனாரி', 'குருதேவ்' என்று பல எடுத்துக்காட்டுக்கள்.

'ஆங்கேன்' திரைப்படத்தில் மாநிலத்தின் முதல் மந்திரியைக் கடத்திச் சென்று, அவரது இடத்தில் அவரே போன்ற உருவம் கொண்ட வேறொருவரை வைத்து, அட்டகாசம் செய்யும் காட்சிகள் அமோக வரவேற்பைப் பெற்றன. மணிரத்னத்தின் 'ரோஜா' தமிழிலிருந்து இந்திக்கு 'டப்' செய்யப்பட்டதென்றாலும், காஷ்மீர்ப் பிரச்னையைச் சுற்றிப் பின்னிய கதை என்பதாலும், ரஹ்மானின் மயிலிறகாய் வருடும் இசை அதன் மெருகு குறையாமல் அப்படியே இந்தியிலும் வார்க்கப்பட்டிருப்பதாலும், இன்னும் சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கிறது. தில்லியில் இன்னும் இரு திரையரங்குகளில் திரையிடப்பட்டுக் கொண்டிருக்கிறது. இப்படத்திற்கு கேளிக்கை வரி

◆ ஸ்ரீதேவி





◆ ஜாக்கி ஷ்ராஃப்

◆ ரேகா



விலக்கு கொடுத்திருப்பதும் குறிப்பிடத்தக்கது. பல நாட்கள் ஓடிய 'மாயாமேம் சாஹப்', 'ருதாலி' போன்ற, பெண்கள் பிரச்னையை முன்வைத்துப் புனைந்த கதையைக் கொண்ட படங்களும் கேளிக்கை வரி விலக்குப் பெற்றன.

'சோலி கே பீச்சே க்யா ஹை' என்ற பாடல் சர்ச்சைக்கு இடமானது எல்லோருக்கும் தெரியும். ஆயினும் ஒரு வித்தை என்னவெனில் 'கல்நாயக்' என்ற அந்தப் படத்தைக் காண ஆண்களை விடப் பெண்களே அதிகம் வந்தனர் என்பதாக ஒரு கணிப்பு கூறுகிறது! 'ஆங்கேன்', 'ரங்க்', 'தலாஷ்', போன்ற படங்களில் படத்தின் ஹீரோயின்களே கவர்ச்சி நடனங்கள் ஆடுகின்றனர்!

அனேக வெற்றிப் படங்களில் ஜூஹி சாவ்லா கதாநாயகியாகத் தோன்றியிருப்பதால் 1993 ம் ஆண்டினை ''ஜூஹி சாவ்லா ஆண்டு'' என்றே திரைப்பட உலகு குறிப்பிடுகிறது. ஆண்களில் ஜாக்கி ஷ்ராஃப் முன்னணியில் இருக்கிறார். வெற்றி நடை போட்டவர்களில் கோவிந்தாவும், மீனாட்சி சேஷாத்திரியும் நானா படேகரும் குறிப்பிடத் தக்கவர்கள். தவிர, இந்த ஆண்டில் மம்தா குல்கர்னி போன்ற இளம் வயதினர் அதிக வாய்ப்பைப் பெற்றுள்ளனர். சென்ற ஆண்டு முன்னணியில் இருந்த ஸ்ரீதேவி, ரேகா, ஜெயப்ரதா போன்றவர்கள் ஓரங் கட்டப்பட்டார்கள்! ஷாருக் கான் தவிர, மற்ற கான்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டிருக்கின்றனர்.



* மீனாட்சி சேஷாத்திரி

டி.வியினால் சினிமா பாதிக்கப்படும் என்ற பேச்சு ஒரு புறமிருக்க, சினிமாவையும் அதில் பங்கேற்பவர்களையும் மையமாக வைத்துத் தயாரிக்கப்பட்ட டீ.வி நிகழ்ச்சிகள், திரைப்படத்தில் ரசிகர்களுக்கு ஒரு புது ஆர்வத்தை உண்டாக்கியுள்ளன. உதாரணமாக 'சூபர்ஹிட் முகாபலா'வில் ஐந்து முறை ஒலி பரப்பப்பட்டு 'ஹால் ஆஃப் ஃபேம்' அடையும் பாடல்கள் கொண்ட திரைப்படங்கள் அந்தப் பாடல்களுக்காகவே விரும்பிப் பார்க்கப்படுகின்றன.



* ஜூஹி சாவ்லா



* ஷாருக்கான்



* கோவிந்தா

பல பிரபல நட்சத்திரங்களைப் போட்டு எடுக்கப்படும் 'மல்டி ஸ்டார்' படங்களுக்கு மவுசு குறைந்து விட்டது. 'ரூப்கி ராணி சோரோம் கா ராஜா' என்ற அனில் கபூர் - ஸ்ரீதேவியின் படம் படு தோல்வி அடைந்ததால் ஒரே படத்தில் பல கோடிகளைக் கொட்ட தயாரிப்பாளர்கள் இன்று பயப்படுகின்றனர். டைரக்டர்களின் பெயருக்காகப் படம் ஓடுவதும் இன்று காணப்படுவதில்லை. மகேஷ் பட் போன்ற பெரும்புள்ளிகள் எடுத்த படங்கள் பல 1993 ல் தோல்வியே கண்டன.

'இத்தகைய படங்கள்தான் பொது மக்களுக்குப் பிடிக்கும்' என்று முன்னதாகவே தீர்மானித்து, புரொட்யூஸர்கள் ஃபார்முலாப் படங்களைக் கொடுத்து வந்த காலம் மலையேறி விட்டது! மசாலாப் படங்களிலிருந்து மாறுபட்டு, சமுதாயப் பிரச்னைகளை அலசிய படங்கள், உள்ளங் கவரும் இசையமைப்பைக் கொண்ட மியூசிகல் காமெடிகள், தேசப்பற்று நெடி வீசும் அரசியல் படங்கள் போன்றவையே 1993 ல் பெருவாரியாக வெற்றி பெற்றிருக்கின்றன.

– ராஜீவி நரசிம்மன்

# வண்ணத்துப்பூச்சி வேட்டை

**சென்ற வாரம் :**

என் பெயர் ரேகா. டில்லியில் படிக்கிறேன். புத்தகம் நிறைய படிப்பேன். அப்பாவிடமிருந்து வந்த பழக்கம். என் பாட்டுக்குப் படித்துக் கொண்டிருந்தவளை, பெண் பார்க்க அர்ஜுன் வந்து பார்க்கில பல கேள்விகள் கேட்டார். வாழ்வில் குறிக்கோள் வேண்டுமாம்; முப்பத்தைந்து வயசில் முப்பத்தைந்து லட்சம் பண்ண வேண்டுமாம் அவருக்கு. நான் பார்க்கில விளையாடிக் கொண்டிருந்த சிறுமிகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். "உங்கள் பெண்ணுக்கு எதிலும் நாட்டமில்லை" என்று சொல்லிப் போய் விட்டார்கள். ஜெயந்தி, "என்னை விட்டுப் போயிடுவியா அக்கா?" என்று கழுத்தைக் கட்டிக் கொண்டு படுத்துக் கொண்டாள்.

## 2

*இருபது பனிமலைகளின்*
*இடையில் ஒரே ஒரு சலனம்.*
*கருங்குருவியின் கண்.*

*– வாலஸ் ஸ்டீவன்ஸ்.*

ஜெயந்தியை நாங்கள் இஷ்டப்படி கூப்பிடுவோம். அம்மு என்று, பப்புலு என்று, குட்டி என்று. எனக்கும் ஜெயந்திக்கும் பன்னிரண்டு வயசு வித்தியாசம். ஏதோ அசால்ட்டாக இருந்து, பையன் வேண்டும் என்று விவாதித்துப் பெற்றுக் கொண்ட பெண். தங்கை போலில்லாமல் எனக்கே ஒரு மகள் போல்தான். அவளை அதட்டுவேன். சொன்ன காரியத்தைச் செய்வாள். எப்போது எனக்குக் கோபம் வரும் என்று தெரியும். மௌனமாக எப்போதாவது கிடைக்கும் என் புன்னகைக்காகக் காத்திருப்பாள். பள்ளிக்கூடத்தில் என்னைப் போல் இல்லாமல் எல்லாவற்றிலும் முதல் ஐந்து ராங்கிற்குள் வருவாள். ஆனால் பதினோரு வயசாகியும் சில சமயம் விரல் போட்டுக் கொள்கிறாள். அதற்கென்று ஸ்பெஷலாக ஒரு போர்வை வைத்திருக்கிறாள். அதன் நூல் பிரியை எடுத்து மேலுதட்டில் குறுகுறு பண்ணிக் கொண்டே விரல் போட்டுக் கொள்வாள். அதை நாங்கள் எல்லோரும் கேலி பண்ணுவோம். அவளை அப்பா அதற்காக சைக்கியாட்ரிஸ்டிடம்கூட அழைத்துச் செல்ல, "நத்திங் ராங் வித் திஸ் சைல்டு; தானாகவே விலகிப் போய்விடும்" என்றார்.

என்னை வந்து பெண் பார்த்த அந்த அர்ஜுன் வீட்டாரிடமிருந்து மேற்கொண்டு ஏதும் தகவல் வராமல் போகவே அப்பா அடுத்த கட்டத்தை ஆரம்பித்து வைத்தார்.

அமெரிக்கா பையன் யாராவது பார்க்கலாம் என்று அங்கே இங்கே விசாரித்து, ஐ.ஐ.டி படித்துவிட்டு, எம். எஸ். படித்துவிட்டு எச். ஒன் விசாவுக்குக் காத்திருக்கும் குமார் ஆண்டிப்பட்டி என்கிற பையன் என்னை வந்து பார்க்க ஏற்பாடாயிற்று. அந்தப் பையன் டிசம்பரில் வருகிறான் என்றும், ஒரு பழனி வைத்தியர் போல திக்விஜயம் செய்து, டில்லியில் நான், சென்னையில் ஒரு பெண், பம்பாயில் ஒருத்தி, பெங்களூரில் ஒருத்தி, சிங்கப்பூரில் ஒரு பெண் என்று பார்க்கப் போவதாகவும் யாராவது பிடித்துப் போனால் உடனடியாகக் கல்யாணம் என்றும் சொன்னார்கள். எங்களுக்காக ஃப்ளைட் டிக்கெட்டை மாற்றி, டில்லியில் ஒருநாள் ட்ரான்ஸிட்டில் இருப்பதாகவும், மான்சிங் ரோடில் டாஜ் ஓட்டலில் சந்திக்க விரும்புவதாகவும் சொன்னார்கள்.

அப்பா சகுனம் எல்லாம் பார்த்து, சர்தார்ஜி கால்சா டாக்ஸிக்குப் போன் செய்து, தக்க சமயத்தில் அந்த நட்சத்திர ஓட்டல் லவுஞ்சில் காத்திருந்தோம்.

சரியாக நாலரை மணியென்றால் நாலரைக்கு அந்தப் பையன் வந்து "ஹாய், ஐ'ம் குமார். யு மஸ்ட் பி ரேகா" என்று என் கையைப் பற்றி வலிக்கக் குலுக்கினான்.

அரை டிராயர் அணிந்திருந்தான். காதில் மாட்டியிருந்த வாக்மேனைக் கழற்றிவிட்டு, "என்ன சாப்பிடுகிறீர்கள்?" என்று வெய்ட்டரை கைச்சொடுக்கில் அழைத்தான்.

"அப்பா, ஃப்ரெஷ்லைம் வித் சோடா" என்றார். நானும் கேட்டேன்.

**சுஜாதா**

''ஜு'ல் ஹாவ் பெப்ஸி இஃப் யு டோண்ட் மைண்ட்.''

குமார் தன் விசிட்டிங் கார்டை எடுத்துக் கொடுக்க, அப்பா அதை ஆர்வத்துடன் பார்க்க, ''என்ன பார்க்கிறீர்கள்? ஆண்டிப் பட்டி என்பது எங்கள் பூர்வீக ஊர். அமெரிக்காவில் வெறும் குமார் சரிப்பட்டு வராது. ஸர்நேம் வேண்டும். அதனால்தான் 'குமார் ஆண்டிப்பட்டி.''

தனக்கு வருஷத்துக்கு ஏறத்தாழ நூறாயிரம் டாலர் கிடைப்பதாகவும் வைய்யோமிங், லான்ஹோவே, கிலியர்வாட்டர் போன்ற மாப்பில் கூடப் பார்த்திரா இடங்களை எல்லாம் சொன்னான்.

''உங்களுக்குத் தமிழ் தெரியுமா?'' என்றார் அப்பா. ''தாராளமா. என்ன, பேஷி ப்ராக்டிஸ் இல்லையா, அத்னாலதான். சின்ன வயசில ஆர்கே மிஷன் ஸ்கூல்ல பாரதியார் எல்லாம் பாடி ப்ரைஸ் வாங்கி இருக்கேன். க்ரேட் பொயட் பாரதி... ஈமெய்ல் சர்க்யூட்ல பாரதியைப் பத்தி யுஎஸ் பூரா ஒரு செமினார் வெச்சோம். வாட் இஸ் கண்ட்ரி நீட்ஸ் இஸ் அனதர் பாரதி!''

திடீர் என்று என்னைப் பார்த்து, ''உனக்கு பொயட்ரில இண்ட்ரஸ்ட் உண்டா?''

''உண்டு'' என்றேன்.

''அமெரிக்கன் பொயட்ஸ் யாரும் படிச்சிருக்கியா?''

''படிச்சிருக்கேன்.''

''யார் பிடிக்கும்?''

''வாலஸ் ஸ்டீவன்ஸ்.''

''வாவ்! தட்ஸ் க்ரேட்! லெட் மி ஸீ. நீ



ப்ளஃப் பண்றியான்னு. வாலஸ் ஸ்டீவன்ஸ் என்ன படிச்சிருக்க, சொல்லு...? ஏதாவது சொல்லு, ஞாபகம் இருந்தா'' என்றான்.

"Thirteen ways of looking at a Blackbird."

''தட்ஸ் அமேஸிங்'' அப்பாவைப் பார்த்து, ''ஸார், இப்ப சொல்லுங்க; நான் என் இட்டினரரியைக் கான்ஸல் பண்ணிட்டு உங்க டாட்டரைக் கல்யாணம் பண்ணிக்கி றேன். மை மை! ஷி இஸ் க்ரேட்!''

அப்பா என்னைப் பார்த்து, ''என்னம்மா ஒகேதானா? அமெரிக்கா போறயா?'' என்று சொல்லிச் சிரித்துவிட்டு, ''குமார், உங்க பேரண்ட்ஸ் கூடவும் பேசிட்டு டிஸைட் பண்ணலாம்'' என்றார்.

குமாருக்கு ஒரு மாதிரி ஏமாற்றமாக இருந்தது. அவனைப் பார்க்க எனக்குப்



திருடர் : இந்த வயசிலும் நீங்க கஷ்டப்பட்டு நடிச்சுத்தான் ஆகணுமா, மேடம்?

நடிகை : பின்னே, பதினேழு பேருக்கு மாசாமாசம் ஜீவனாம்சம் குடுக் கறதுன்னா சும்மாவா?

– வேதபுரி எஸ். ரமேஷ்

பாவமாக இருந்தது. ஏன் என்று தெரிய வில்லை.

அவன் பனியனில் 'யூஎஸ்ஏ' என்று பெரிசாக எழுதியிருந்தது.

அப்பா வீட்டுக்குப் போனதும், ''இந்தப் பையன் வேண்டாம்'' என்றார்.

அம்மாவுக்கு ரொம்பக் கோபம் வந்தது.

''அரை டிராயர் போட்டு கால்ல மொசமொசன்னு மயிரைக் காண்பிச்சுக் கொண்டு காதில வாக்மேனை மாட்டிண்டு இருக்கிறான். அவனுக்குப் போய் என் மகளைக் கொடுக்க விருப்பமில்லை'' என்றார்.

''என்ன சொல்றீங்க; அமெரிக்கால இப்ப எல்லாரும் அப்படித்தான் இருப்பா. என்னடி ரேகா, நீ சொல்லு, உனக்கு இஷ்ட மில்லையா?'' என்றாள் அம்மா.

''நான் என்ன சொல்ல அம்மா. நீங்க ரெண்டு பேரும் தீர்மானிச்சுச் சொல் லுங்கோ.''

''இப்படி ஒரு பொண்ணு இருப் பாளோ?'' என்றாள்.

''அவளுக்கு நல்லது பண்றதா நெனச் சுண்டு...'' என்று ஆரம்பித்தவரை,

''உங்களுக்கு உங்க பொண்ணு அமெ ரிக்கா போறதில இஷ்டமில்லை. அதைச் சொல்லி விடுங்களேன். பின்ன ஏன் இந்தப் பையனைக் கூப்பிட்டுக் காட்டணுமாம்?''

''எனக்கு எப்படித் தெரியும், அவன் இந்த மாதிரி 'பொம்மை பனியனும் மினரல் வாட்டருமா வருவான்' என்று? ஆமாம், அவ அமெரிக்கா போறதில இஷ்டமில்லை. ரொம்ப ஃபோனி ஆசாமி அவன்!''

''போனின்னா என்ன?''

''குதிரை'' என்றாள் ஜெயந்தி.

நாங்கள் எல்லோரும் சிரித்துவிட் டோம்.

அப்பா என் தலையைத் தடவிக் கொடுத்து ''ரேகா! பாரு, நான்... கொஞ்சம் பொறுமையா இருந்தா...''

''எனக்கு ஏதும் அவசரம் இல்லை யப்பா'' என்றேன்.

அன்றைக்கு அம்மா ராத்திரி சாப்பிட வில்லை.

மூன்றாவதாக சேஷாத்திரி என்கிற நண்பர் சொன்னார் என்று டில்லியிலேயே லோக்கலாக ஒரு பையன் வந்து என்னைப் பார்க்க ஏற்பாடு பண்ணியிருந்தார்கள். பையனுக்கு அப்பா அம்மா இல்லை யென்றும், அக்காதான் எல்லாம் என்றும் தெரிய வந்தது. அந்த அக்காவும் கணவரும் வந்திருந்தார்கள். பையன் தனி ஆட்டோ வில் வந்தான். அவன் பெயர் கிருஷ்ண ப்ரேமி.

என்னை 'நீங்க, வாங்க' என்று மரியா தையாகப் பேசினான். இயற்கை வைத்தி யம், யோகாசனம் முறைகள் பற்றியெல் லாம் அப்பாவுடன் பேசிவிட்டு என்னை வராந்தாவில் தனியாக அழைத்து, ''உங்க ளது கழுத்தில் ஒரு மரு போல கறுப்பாக இருக்கிறதே, அது பிறவியிலிருந்தே இருக் கிறதா?'' என்று கேட்டான்.

''அப்படித்தான் ஞாபகம்'' என்றேன். ''உங்களுக்கு மூக்குக்குப் பக்கத்தில் உண்ணி போல இருக்கிறதே அது?'' என்று கேட்க வில்லை நான். ஆனால் அதைப் பார்த் தேன்.

''தப்பா நினைக்கக்காதீங்க. இயற்கை வைத்தியத்தில் இதுக்கு ஒரு மருந்து இருக் கிறது. யோகாவில் எக்ஸர்ஸைஸ் இருக்கு. எனக்கு இருக்கு பாருங்க'' என்று நான் போன பாராவில் குறிப்பிட்ட உண்ணியைக் காட்டி, ''இது வந்து ஒரு ரூபா சைஸ் இருந்

தது. இத்தனூண்டு ஆகிவிட்டது. பாருங்க, எல்லாம் யோகா எக்ஸர்ஸைஸ்.''

நான் மையமாகச் சிரித்தேன்.

''இஃப் யு டோண்ட் மைண்ட் கொஞ்சம் ஆ காட்டுங்க?''

''ஆ.''

''குட்! உங்க கம்ஸ் எல்லாம் ஹெல்த்தியா இருக்கு! பல் தேய்க்கறப்ப ஈறுகளையும் தேய்க்கணும் தெரியுமா? ஈறு, நாக்கு, மேல் அண்ணம்.''

நான் நாக்கை நீட்டினேன்.

''உங்களுக்கு என்ன பிடிக்கும்?''

''புஸ்தகம் படிப்பேன்.''

''நானும் படிப்பேன். ஆனா கீதை மட்டும்தான் படிப்பேன். அதுவும் பதினெட்டாவது சாப்ட்டர் தலைகீழ்ப் பாடம். எல்லாச் செயலுக்கும் மனம், கர்மா, கர்த்தான்னு மூணு உண்டு. இப்ப நான் உங்களை வந்து பார்க்கிறதுகூட ஒரு செயல்தான். இதில கர்மா யாரு? கர்த்தா யாரு?'' என்று கேட்டான்.

நான் சிரித்து மழுப்பினேன். ''நான் கீதை படிச்சதில்லை.''

''கீதை படிக்க வேண்டாம்; காமன் சென்ஸ் கொஸ்சன்!''

''ஸாரி எனக்கு ஆன்ஸர் தெரியல'' என்றேன்.

அவர்கள் வீட்டுக்குப் போனதுமே போன் செய்தார்கள். ''ரொம்ப தங்கமான பொண்ணு. எங்காத்து கிருஷ்ணப்ரேமிக்கு ரொம்பப் பிடிச்சுப் போச்சு. சரின்னுட்டான்'' என்றார்கள்.

அப்பா என்னைக் கேட்டபோது, ''அப்பா, இந்தாளைக் கல்யாணம் செய்துண்டா காலைல அருகம்புல் ஜூஸ் குடிச்சுட்டுக் காவி வஸ்திரம் உடுத்திக்கணும் போல பயமா இருக்குப்பா. பயங்கர பிலாசபி இந்த வயசுக்கு'' என்றேன்.

அப்பா சிரித்தார்.

அம்மாதான் வெறுப்பாகப் பதில் சொன்னாள் : ''இப்படித் தட்டிக் கழித்துக் கொண்டே போனால் எப்பத்தான் உனக்குக் கல்யாணம் ஆகும்? இந்தப் புரட்டாசிக்கு உனக்கு என்ன வயசாறது தெரியுமா? உன் வயசில நான்...''

நான், ஜெயந்தி, அப்பா மூவரும் கோஷ்டியாய், ''ரேகாவை உண்டாய்ட்டேன்'' என்றோம்.

அம்மாவும் சட்டென்று முகமலர்ந்து சிரித்து, என்னை அருகே அழைத்துக் கன்னத்தைத் தடவி, ''இங்க வாடி என் ராஜாத்தி, உனக்கு இஷ்டமில்லைன்னா வேண்டாம்.''

''உங்களுக்கு இஷ்டமில்லைன்னாலும் வேண்டாம்'' என்றேன் நான்.

''ஜெயந்தி, ''அம்மா! ரேகாவுக்கு எதுக்குக் கல்யாணம்? அவ பாட்டுக்கு இங்கேயே இருந்துவிட்டு எனக்கு ஹோம் ஒர்க் பண்ணிக் கொடுக்கட்டுமே?'' என்றாள்.

''உனக்குச் சொன்னா புரியாது கண்ணு.''

''நல்லா புரியும்! கல்யாணம்ங்கிறது பாப்பா பொறக்கத்தானே?''

அதற்கப்புறம், என் கல்யாண ஏற்பாடு முன்னணியில் ஏதும் நிகழவில்லை. மார்கழி மாதம் பிறந்து, டில்லியில் குளிர் அதிகமாகி, வானத்தை ஏழைகள் எரிக்கும் குளாக்களின் புகைப் போர்வை பிடிவாதமாகச் சூழ்ந்து கொண்டு கலைய மறுக்க, பார்க்கில் எல்லாரும் ஜூலையைக் காயப்

"அந்தப் போட்டித் தலைவர் பலே ஆளா இருப்பார்னு தோணுது!"

"எப்படி...?"

"கட்சியை விட்டு அவரை நீக்கினதும், 'கொடியையும் கொள்கையையும் நீங்களே வச்சுக்குங்க; கோடியையும், சொத்துக்களையும் என்கிட்டே கொடுங்கன்னு கேக்கறாரே!"

– சீர்காழி வி. ரேவதி



போட்டுக் கொண்டு வெயில் தெரியும் இடங்களில் எல்லாம் கன்னம் சிவக்கக் குளிர் காய்ந்தோம். கடலைக்காய் உடைத்துச் சாப்பிட்டோம். கம்பளிக்குள் கதகதப்பு வரும்வரை கைகளை உரசிக் கொண்டோம். பழைய உலக சமாசாரங்களை ட்ரைக்ளீன் பண்ணி நாஃப்தலின் மணக்கப் போட்டுக் கொண்டோம். போன் வேலை செய்யவில்லை. என் கல்யாணம் சட்டென்று நிச்சயமானது. முதல் முதல் என்னைப் பார்த்த அர்ஜுன் தந்தி அடித்திருந்தார். "I accept Rekha letter follows."

மூன்று பேரும் சரி என்று சொல்லியாயிற்று. இப்போது மூன்று பேரில் யார் என்பதைத் தீர்மானிக்க வேண்டியதாயிற்று.

(தொடரும்)

''பையன் பேரு சுந்தரராஜன். ராஜாவாட்டம் இருப்பான். மெக்கானிகல் இன்ஜினியரிங் டிப்ளமா. யார்கிட்டேயும் கை கட்டி வேலை செய்யப் பிடிக்கலேன்னு தனியா மெக்கானிகல் ஷாப் வச்சு நடத்திட்டிருக்கான். பையன் ரொம்ப குணவான். எந்தத் தப்பான பழக்கமும் இல்லாதவன். பையனுக்கு அப்பா - அம்மா இல்லை. அண்ணா - மன்னிதான். அதிகம் எதிர்பார்க்க மாட்டா. முக்கியமா உங்க பொண்ணோட நட்சத்திரத்துக்கு ரொம்பப் பொருத்தமான பையன்.''

# பொருத்தம்

- தரகர் பையனின் படிப்பையும் வாழ்வையும் சொன்னபோதே கமலிக்குக் கசந்தது.

கமலி எம். காம். பட்டதாரி. கூடவே சி.ஏ.ஐ.ஐ.பி டிப்ளமா பெற்றுப் பெரிய வங்கியொன்றில் அதிகாரியாக இருப்பவள். நல்ல அழகி. அப்பா ரிடையர்டு டீச்சர். மகள் கல்யாணத்திற்காக ஓரளவுக்குச் சேர்த்தும் வைத்திருந்தார். ஆனால் கமலியின் 'நட்சத்திர தோஷம்' எந்த வரனும் தகையாமல் போய்க் கொண்டிருந்தது. ஒத்துவந்த இரண்டொரு வரன்களும் கேட்ட 'விலை' மிகவும் அதிகமாக இருக்கவே, இருபத்தெட்டு வயதாகியும் கமலியின் கழுத்து காலியாகவே இருந்தது.

கமலியின் கற்பனைக் கணவன், அழகாக உடுத்தி, ஏ. ஸி. ரூமில் அமர்ந்து, காரில் பயணம் செய்து, வசதியாக வாழ்பவன். காலையில் அவளைக் கொண்டு வந்து ஆபீஸில் 'டிராப்' செய்துவிட்டு, மாலையில் அவளை 'பிக்-அப்' செய்து கொண்டு பீச், டிராமா என்று சுற்றக் கூடியவன்.

ஆனால் தரகர் சொன்ன சுந்தரராஜனோ, நிச்சயமாக அப்படியெல்லாம் இருக்கப் போவதில்லை. 'க்ரீஸ்' கறை படிந்த அழுக்கு காக்கி பேண்ட் - சட்டையில் கண்ணாடி தம்ளரில் டீ உறிஞ்சிக் கொண்டு...

கமலிக்குக் குமட்டிக் கொண்டு வந்தது.

அப்போதே 'இந்த வரன் வேண்டாம்' என்று அப்பாவிடம் சொல்லிவிடலாமா என்று பார்த்தாள்.

''மொதல்லே பையனை நீ பாரு. அவன் உன்னைப் பார்க்கட்டும். அப்புறம் பேசலாம். அதுவும் உனக்குப் பொருந்தி வர்ற நட்சத்திரம் கிடைக்கிறதே அபூர்வம். பேசாம இரு...'' என்று அப்பா வாயை அடைத்து விடுவார் என்று தோன்றியது. மௌனமாக இருந்தாள். எப்படியும் தன்னை மீறி எதுவும் நடந்துவிடாது என்பது அவளுக்குத் தெரியும்.

பெண் பார்க்கும் தினத்தன்று -

வரனும், அவனுடைய அண்ணா - மன்னியும் வீட்டில் நுழையும்போதே ஜன்னல் வழியாகப் பார்த்த கமலிக்கு வாழ்க்கையே வெறுத்துவிட்டது.

'இவனையா 'ராஜாவாட்டம் இருப்பான்' என்று சொன்னார் தரகர்?' என்று எரிச்சலுற்ற கமலிக்கு, 'ராஜா என்ன, ராஜா வீட்டுச் சமையலறை எடுபிடியாகக் கூட இவனை எடுத்துக் கொள்ள மாட்டார்கள்' என்று தோன்றியது.

கமலியை விடக் குறைவான உயரம். வெள்ளை வேஷ்டி, சட்டையில் தொட்டால் ஒட்டிக் கொள்ளுமோ என்று பயப்படும் அளவுக்குக் கறுப்பு நிறம். இந்த லட்சணத்தில் முகத்தில் அம்மைத் தழும்புகள் வேறு.



படிப்பு இல்லை; சிறிதும் அழகில்லை; அந்தஸ்து இல்லை. எவ்விதத்திலும் தனக்கு ஈடில்லாத இந்த வரனை இங்கே அழைத்து வர அந்தத் தரகருக்கு எவ்வளவு துணிச்சல் இருக்க வேண்டும் என்று நினைத்த கமலிக்கு, ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. நாலு பேர் முன்னிலையில் கலாட்டா செய்யக்கூடாது என்று அமைதி காத்தாள் கமலி. ஆனால் முகத்தில் குடிகொண்டுவிட்ட கடுகடுப்பை மட்டும் அவளால் மறைக்க முடியவில்லை.

'வந்தவர்கள்' வாசலைத் தாண்டிய உடனே அப்பாவையும் தரகரையும் பிலுபிலுவெனப் பிடித்துக் கொண்டாள் கமலி.

''இப்படி எல்லாம் என்னை யார் தலையில

யாவது கட்ட வேணாம். நான் ஒண்ணும் 'உங்களைக் கல்யாணம் பண்ணி வைங்க'ன்னு கேக்கலே. இனிமே நீங்க எனக்காக வரன் பார்க்கவே வேணாம். எனக்கு ப்ராப்தம் இருந்தால் தானே நடந்துட்டுப் போறது. அதுக்காக இப்படி எந்தப் பொருத்தமுமே இல்லாத ஓர் ஆளைக் கட்டிக்க நான் தயாரா இல்லே...'' திட்டவட்டமாகத் தன் முடிவைக் கூறினாள் சுமதி.

அம்மா விடவில்லை.

''அப்படி என்னடி குறை கண்டுட்டே அந்தப் பையன்கிட்டே? வெள்ளை பாண்ட், ஷர்ட் போட்டுக்கிட்டு ஆபீஸ்லே போய் உட்கார்ந்து பார்க்கறதுதான் உத்தியோகமா? பையன் சுயமா தொழில் பண்ணி, சொந்தக் கால்லே நிக்கறான். அது தப்பா? உன்னைவிட, அவன் அதிகமாவே சம்பாதிப்பான்னு தோணுது'' என்றவள், ''அழகு என்னடீ பெரிய அழகு? ரெண்டு குழந்தை பெத்துண்டியானா நீயும் பாட்டி மாதிரி ஆயிடுவே. அதெல்லாம் நிலையானது இல்லே. குணம்தான் முக்கியம். அவன் தன்னோட அண்ணா - மன்னியோட நடத்துக்கறதைப் பார்த்தாலே சந்தோஷமாயிருக்கு. நிச்சயம் நல்ல பையன்தான். இவனைப் பண்ணிண்டா நிச்சயம் ஒஹோன்னு இருப்பே. அவ்வளவுதான் என்னாலே சொல்ல முடியும்'' என்றாள் நிஷ்டூரமாக.

''சுமதி நீ படிச்ச பொண்ணு உனக்கு விவரமாச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லே. நட்சத்திரம் பொருந்தி வர்றது. அவங்களும் அதிகமா டிமாண்ட் பண்ற மாதிரி தெரியலே. 'பொண்ணுக்குச் சம்மதம்னா தேதியைக் குறிக்கலாம்னு' பையனோட அண்ணா சொல்லிட்டுப் போயிட்டாரு. 'போயி லெட்டர் போடறோம்'னு பந்தா எல்லாம் பண்ணலே. யோசிச்சுப் பாரும்மா'' என்றார் அப்பா.

'இதிலே யோசிக்க ஒண்ணுமில்லே. என் முடிவு முடிவானதுதான்' என்றது சுமதியின் இறுக்கமான முகம்.

சந்தியா மணிவாசகன்

இரண்டாவது நாள்.

'மாப்பிள்ளையிடமிருந்து வந்த கடிதத்தைக் கண்டு இடிந்து போய் உட்கார்ந்திருந்தார் சுமதியின் தந்தை. சுமதியோ துள்ளிக் குதித்தாள்.

''பார்த்தீங்களா அப்பா, நல்ல பையனின் லட்சணத்தை? அவருடைய மெகானிகல் ஷாப்பை 'இன்ஜினியரிங் ஷாப்'பாக மாற்ற ஒரு லட்சம் தர முடியுமான்னு கேட்டிருக்காரு. 'கடன்'கற வார்த்தையை யூஸ் பண்ணியிருக்காரு. ஆனா மறைமுகமா அவரு கேக்கறது வரதட்சணை. இப்ப என்ன பண்றதா உத்தேசம்? ஒரு லட்சம் கொடுத்தாவது, என்னைத் தள்ளிவிடறதா எண்ணமா? நீங்க பைத்தியக்காரத்தனமாச் செய்யறதா இருந்தாலும் நான் நிச்சயம் சம்மதிக்க மாட்டேன்...'' - கொக்கரித்தாள் சுமதி.

''பையன் நிறம் மட்டும்தான் கறுப்புன்னு நினைச்சேன். மனசும் கறுப்புன்னு இப்பத்தான் தெரியுது. இப்பவே ஒரு லட்சம் கூசாமே கேக்கறவன், நாளைக்கே மறுபடியும் ஏதாவது கேட்டு உன்னைக் கண்கலங்க வைக்க மாட்டான்னு என்ன நிச்ச



யம்?'' என்றவர், ''சரிம்மா. இன்னிக்கே அவன் நாக்கைப் பிடுங்கிக்கற மாதிரி நிட்டி லெட்டர் எழுதிப் போட்டுடறேன்'' என்றார்.

**ச**ந்தோஷமாக ஆபிஸை அடைந்த சுமதி அங்கே தனக்காகக் காத்திருந்த சுந்தரராஜனைக் கண்டதும் அதிர்ந்தாள்.

'ஏன் இங்கே வந்திருக்கிறான்? கடிதத்தின் விஷயத்தை நேரடியாகச் சொல்லி, அவளை இப்போதே ஏதாவது லோன் போட்டுத் தா என்று கேட்க வந்திருப்பானோ' என்று தோன்றியது. அதனால் பல்லைக் கடித்தபடி அவனைக் காணாதவள் போல் மடமடவெனத் தன் இருக்கைக்குச் சென்று அமர்ந்து கொண்டாள்.

அவள் எதிரே வந்து அங்கேயிருந்த இருக்கையில் அமர்ந்த சுந்தரராஜன்,

''கங்கிராஜுலேஷன்ஸ்'' என்றான் சுருக்கமாக.

'எதற்கு?' என்று புரியாமல் விழித்த சுமதியைப் பார்த்துக் கலகலவெனச் சிரித்த அவன் தொடர்ந்தான் :

''உங்க விருப்பத்திற்கு மாறா இந்தக் கல்யாணம் நடக்காது இல்லே? அதுக்குத்தான்'' என்று அவன் மற்றொரு புதிர் போட்டதும், 'என்ன சொல்கிறான் இவன்?' என்று நிமிர்ந்து உட்கார்ந்தாள். அவனே விளக்கினான் :

''என்ன மேடம், முழிக்கிறீங்க?'' ஒரு லட்சம் ரூபாய் கேட்டு என் லெட்டர் வந்ததா? உங்க அப்பா - அம்மா மனம் வெறுத்து, இந்த வரன் வேண்டாம்னு முடிவுக்கு வந்திருப்பாங்களே...?'' என்றவன்,

''தரகர் உங்களைப் பத்தின எல்லா விவரங்களையும் சொன்னப்பவே இது பொருந்தாத கல்யாணம். நிச்சயமா நடக்காதுன்னு எனக்குப் பட்டது. ஏன்னா, என்னுடைய பர்சனாலிட்டி, படிப்பு, தொழில் எதுவுமே உங்க டேஸ்ட்டுக்கு ஒத்துவராதுன்னு தெரிஞ்சது. வேண்டாம்னு தரகர்கிட்டே சொன்னேன். ஆனா அன்னா - மன்னிக்கு ஆசை. அவங்கதான் என்னை எடுத்து வளர்த்தவங்க.

''நட்சத்திரப் பொருத்தம் இல்லாததால தான் அந்த பொண்ணோட கல்யாணம் தள்ளிட்டே போகுதாம். உனக்கும் இப்படியொரு நட்சத்திரப் பொண்ணு கிடைக்கறது கஷ்டம். பகவான் ப்ராப்தம் இதுதான் நடக்கணும்னு இருந்தா, யார் தடுத்து நிறுத்த முடியும், பொண்ணைப் போய்ப் பார்த்துட்டு வருவோமே, இதிலென்ன தப்பு'ன்னு, என்னைப் பெண் பார்க்க வரச் சம்மதிக்க வச்சுட்டாங்க. ஜன்னல் வழியா என்னைப் பார்த்தீங்களே, அப்பவே உங்க முகம் சுருங்கிப் போனதைக் கவனிச்சேன். அப்புறம் காப்பி கொடுக்கறப்போ பார்த்தேன்.

''நான் உங்களை மாதிரி பி. ஜி. டிகிரி ஹோல்டர் இல்லேன்னாலும் ஓரளவுக்குப் படிச்சவன்தானே? நாலு பேரோட பழகறேன் இல்லே? உங்க மனசு புரிஞ்சு போச்சு. உங்க அப்பா அம்மா கட்டாயத்துக்காகத்தான் பெண் பார்க்கிற சம்பிரதாயத்துக்கே ஒத்துக்கிட்டிருப்பீங்கன்னு பட்டது. என்னதான் படிச்ச, சம்பாதிக்கிற பொண்ணா இருந்தாலும், அப்பா அம்மாவுக்குக் கட்டுப்படற பொண்ணுன்னு புரிஞ்சு போச்சு. அவங்க கட்டாயப்படுத்தினா கல்யாணத்துக்கும் சம்மதிச்சுடுவீங்கன்னு தோணிச்சு. அப்படி உங்க வாழ்க்கையைப் பாழடிக்கறதுலே எனக்கு விருப்பம் இல்லே. 'உங்களுக்கு ஏத்த, எல்லாத்திலயும் பொருத்தமான வரன் கிடைக்கணும்'னு நீங்க ஆசைப்படறது தப்பில்லே. அது உங்க உரிமை. ஆனா அந்த உரிமையை நிலை நாட்டிக்கற சக்தி உங்களுக்கு இல்லேன்னு பட்டது. லோ, உங்களுக்கு விருப்பமில்லாத இந்தக் கல்யாணம் நடக்கக் கூடாதுன்னா, அதைச் செய்ய என்னாலே மட்டும்தான் முடியும்னு பட்டது. 'பொண்ணு பிடிக்கலேன்னு' காரணம் சொன்னா, உங்க அப்பா - அம்மா மனசு கஷ்டப்படும். ஏன் ஒருவேளை உங்களுக்கே கூட, 'இவன்கூட நம்மை வேணாம்னு சொல்லிட்டானே'ன்னு எப்பவாவது தோணும். அதையெல்லாம் அவாய்ட் பண்ணத்தான் 'ஒரு லட்சம்' டிமாண்டு வைத்தேன். ஆனா, பொய்யாக்கூட 'வரதட்சணை'ங்கற அசிங்கமான வார்த்தையை யூஸ் பண்ண மனம் ஒப்பலே. அதான் 'கடன்'னு எழுதினேன்... ம்... எப்படியோ உங்களுக்குப் பிரச்னை ஸால்வ் ஆனதில் சந்தோஷம்தானே...!'' என்று எழுந்தான் சுந்தரராஜன்.

சுமதியின் கண்களில் நீர் பளபளத்தது.

---



''உங்க வாழ்க்கைல பல ஏற்றங்களையும் இறக்கங்களையும் சந்திக்க வேண்டியிருக்கும்னு ஜோசியர் சொன்னது பலிச்சிடுச்சு!''

''எப்படி...?''

'' 'டவுன் பஸ்'ல 'கண்டக்டர்' வேலைல சேர்ந்துட்டேனே...!''

– ஜூனியர் தேஜ்

வீட்டின் பேரில் கடன்

குறைந்த வட்டிக்கு !

- விரைந்த சேவை.
- சென்னை நகர வீடு/நிலம்/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும்.
- தங்க நகைக் கடனுக்கு வட்டியை தவிர வேறு எந்த கட்டணமோ அல்லது வரியோ வசூலிப்பதில்லை.

## திரு.வி.க. நகர் பெனி:ஃபிட் :ஃபண்டு லிமிடெட்

தலைமை அலுவலகம்: 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யூ, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை 600 082. போன்: 610390
வேலை நேரம் : 9.00 முதல் 12.30 2.00 முதல் 5.00 ஞாயிறு விடுமுறை.

பாரீஸ் கிளை: 49, வெங்கடாசல முதலி தெரு, முதல் மாடி, (பட்டணம் கோவில் அருகில்), பார்க்டவுன், சென்னை 600 003. போன்: 565760
வேலை நேரம் : 10.00 முதல் 1.00 வரை 2.00 முதல் 5.00 ஞாயிறு விடுமுறை.

நகை பேரில் கடன்

குறைந்த வட்டிக்கு !



SANSKRIT THROUGH CORRESPONDENCE

## संस्कृतम्
## சமஸ்கிருதம்

தபால் மூலம் 6 மாதகால தமிழ் ஆங்கில வாயிலாக சிறப்புப் பயிற்சி

SANSKRIT THROUGH CORRESPONDENCE

**சமஸ்கிருத** மொழியை இப்பொழுது நீங்களும் தபால் மூலம் ஆறே மாதங்களில் பேச, எழுத படிக்கக் கற்றுக்கொள்ளலாம்

தேர்ச்சிபெற்ற சமஸ்கிருத பண்டிதர்களால் இயற்றப்பட்ட பாடங்கள் மாதம் ஒரு முறை தபால் மூலம் அனுப்பப்படும். நூற்றுக்கணக்கானோர் இப்பயிற்சியில் சேர்ந்து தேவ மொழியான சமஸ்கிருதத்தை கற்றுக் கொண்டுள்ளனர். ஏன் நீங்களும் இன்றே சேர்ந்து ராமாயணம், மஹாபாரதம், பகவத்கீதை போன்ற காவியங்களை சமஸ்கிருத மொழியிலேயே படித்து பயன் பெறலாமே! அவைகளில் நல்ல செய்திகள் அடங்கியுள்ளன.

இலவச Prospectus பெற இன்றே எழுதுங்கள். இறுதி தேதிக்குள் சேரும் அனைவருக்கும் பரிசு புத்தகம் ஒன்று உ ள்ளது என்பதை நினைவில் நிறுத்துங்கள்.

INDIANA SANSKRIT ACADEMY
C/o. INDIANA ACADEMY OF MANAGEMENT SCIENCES,
Post Box No. 1108, Bhashyakarlu Road,
Coimbatore - 641 002, Tamil Nadu.


பொங்கலோ
பொங்கல்
இன்னும் என்னென்ன ஊழல்
விவகாரங்கள் உண்டோ கொண்
போகி கொளுத்தலாம், இனிர் விப
போயிடும்!
பொங்கலோ பொங்கல்!
போ:.போர்ஸ்
செயின்ட் கிட்ஸ்
பொங்கல் பானையை நீயே
உன் கையால் ஏத்தி வைச்சுடு.
நாலு பேர் எமடு ஆட்சேபணை
எழுப்பினா எழுப்பிட்டுப்
போகட்டும்
ப.சிதம்பரம்
சுக்லா
பட்ஜெட்
ஆ! ரொம்ப ஜீஸியா
இருக்கு!
காங்கிரஸ்


பொங்குதே அரசியல்!
இதோ நானும் வந்துட்டேன், இதையும் போட்டு கொளுத்தலாம்!
அவதூறு வழக்குகள்
நான்தான், என்னோட சூரியன்!
சென்னா ரெட்டி
மதி...

# சக்கரவர்த்தித் திருமகன்

## 66. அசோகவனத்தில் சீதை

ராஜாஜி

அந்த வனத்து மதில் சுவரின்மேல் நின்றதும் ஹனுமானுடைய உள்ளத்திலும், சரீர அவயவங்கள் முற்றிலுமே ஒருவித ஆனந்த உணர்ச்சி ஊடுருவிப் பாய்ந்தது. சீதை இருக்கும் இடத்துக்கு வந்து சேர்ந்து விட்டபடியால் தன்னையும் அறியாமல் இந்த மகிழ்ச்சி உற்பவமாயிற்று.

வசந்த காலத்துத் துவக்கத்தில் மலரும் புஷ்பங்கள் எல்லாம் பூத்து, மரங்களும் கொடிகளும் மிக ரம்மியமான காட்சி தந்தன. அடர்த்தியாக மரங்கள் இருந்த ஒரு இடத்தைப் பார்த்து அங்கே ஹனுமான் தாவிச் சென்றான். அந்த அதிர்ச்சியினால் எழுப்பப்பட்ட குயில்களும் மயில்களும் மதுரமாகச் சப்தித்தன. மான்களும் வேறு மிருகங்களும் நடமாடிக் கொண்டிருந்தன. மரங்களினின்று மலர்கள் உதிர்ந்து ஹனுமானுடைய உடல் முழுதும் போர்த்து அவன் உருவம் புஷ்பமயமாகக் காணப்பட்டது. நந்தவனத்திலிருந்த பிராணிகள் மலர் மயமான ஹனுமானுடைய அழகிய சிறு குரங்கு உருவத்தைப் பார்த்து வசந்த தேவதையே வனத்துக்கு அதிகாலையில் வந்து விட்டது என்று எண்ணின.

அந்தத் தோட்டத்தின் ரமணீயம் யார் மனத்தையும் கவரத்தக்கதாக இருந்தது. அழகிய வாவிகள், தங்கம், வெள்ளி, தந்தம், முத்து, பவழம் இவற்றால் அலங்கரிக்கப்பட்ட தளங்கள், படிகத் தள வரிசைகள், செய் குன்றுகள், ஆறுகள், பூங்கொடிகள், அருவிகள், அவற்றில் விளையாடிக் கொண்டிருந்த அழகிய பறவைகள் - இந்தக் காட்சி ஹனுமானுடைய உள்ளத்தில் ஆனந்தம் உண்டாக்கிற்று. சில மரங்களைச் சுற்றி அழகிய தங்கமேடைகளும் வெள்ளி மேடைகளும் கட்டப்பட்டிருந்தன. மரங்களில் கட்டித் தொங்கிய சிறு மணிகள் காற்றால்



அசைக்கப்பட்டு மெதுவாகத் தொனித்துக் கொண்டிருந்தன. தங்க மேடையால் அலங்கரிக்கப் பட்டு உயர்ந்து பரவி நின்ற ஒரு மரத்தின் மேல் ஏறி இலை மறைவில் ஹனுமான் உட்கார்ந்தான்.

“உயிரோடிருப்பாளானால் சீதை நிச்சயம் இந்த அழகிய நந்தவனத்துக்கு வருவாள். ராமனைத் தனியாக இருந்து தியானிக்க இந்த ரமணீயமான இடத்தையே அவள் விரும்புவாள். மரங்களும் கொடிகளும் நிறைந்த வனத்தில் நடமாடுவதில் ஜானகிக்கு மிகப் பிரியம் என்று சொன்னார்கள் அல்லவா? காலைச் சந்தியா காலத்தில் தேவியை உபாசித்துப் பிரார்த்தனை செலுத்த இங்கே நிச்சயமாக வருவாள்.”

இவ்வாறு யோசித்துக் கொண்டும், சுற்றிப் பார்த்துக் கொண்டும், இலைகளின் மறைவில் அந்த மரத்தின் மேல்

“கெட்டுப் போன உணவைப் பிச்சைக்காரனுக்குக் கொடுக்காதேன்னு சொன்னேனே... கேட்டியா...?”

“ஏங்க?”

“கன்ஸ்யூமர் கோர்ட்டுக்குப் போய் உனக்கு நோட்டீஸ் விட்டிருக்கான்!”

– தேனி எஸ். மாரியப்பன்



ஹனுமான் உட்கார்ந்து கீழே பார்த்தான். கண்ணைக் கூசும்படி பிரகாசித்துக் கொண்டிருந்த அழகான, நிர்மலமான அந்த மரத்தடி மேடையின் பேரில் ஒரு மானுடஸ்திரீ இருப்பதைக் கண்டான்.

கசங்கிப் போய்த் தூசி தங்கிய ஒரு மஞ்சள் வஸ்திரம் உடுத்தியிருந்த அந்த ஸ்திரீயின் முகத்தில் புகையால் மூடிய சுடரைப் போல் அழகும் துக்கமும் கலந்து நின்றதைக் கண்டான். அடிக்கடி பெருமூச்செறிந்து உபவாசத்தால் நலிந்து முதல் நாள் பாலசந்திரனைப் போல் கண்டும் காணாமலுமாக இருந்தாள். அவளைச் சுற்றிச் சில அரக்கிகள் உட்கார்ந்திருந்தார்கள். பெருந் துக்கத்தால் பீடிக்கப்பட்ட அந்தப் பெண்ணுருவத்தைக் கண்டதும் இவளே சீதை என்று ஹனுமான் நிச்சயித்தான்.

தெய்வீக காந்தி வீசிய முகத்தில் தீராத துயரத்தைக் கண்டான். கொடிய அரக்கிகளால் சூழப்பட்டு, வேட்டையாடப் பட்டுத் தன் கூட்டத்திலிருந்து பிரிந்து போய், பயந்து நாலா பக்கமும் விழித்துத் தவிக்கும் ஒரு மானைப் போல் காணப்பட்டாள். கறுத்து நீண்ட தலைமயிர் பின்னப்படாமல் தொங்கிற்று. துக்கம் என்பதே அறியாத ஒருத்தி பெருந் துயரத்தில் சிக்கிப் போய் இன்னது செய்வது என்று தெரியாமல் அலைந்தவளாகக் காணப்பட்டாள். துக்கத்தாலும், உணவின்றியும் இளைத்துப் போய் அழுக்குப் படிந்த ஆடை உடுத்தி ராக்ஷஸிகளுக்கிடையில் உட்கார்ந்திருக்கும் இந்த அழகி சீதையே என்று ஹனுமான் நிச்சயித்து விட்டான்.

ஆபரணங்கள் அணிய வேண்டிய அழகிய தேகமாக இருந்தது. ஆனால் ஆபரணமின்றியிருந்தது. மேகம் மூடிய சந்திரனைப் போலிருந்தது அவள் முகம். பார்க்கப் பார்க்க அந்தத் தங்க மேடையின்மேல் ஆபரணங்களின்றிக் கவலையும் பயமும் நிரம்பிய முகத்தோடு உட்கார்ந்திருந்த அந்த ஸ்திரீயின் தோற்றம், மெய்ப்பாடுகள் எல்லாம் கவனித்து அவளே சீதை என்பதாக உறுதி கொண்டான்.

ராமனுக்காக பூமண்டலம் முழுதும் வானரர்களால் தேடப்பட்ட சீதையைக் கண்டு விட்ட மகிழ்ச்சி பெரிதாயினும், கண்ட உருவத்தின் கடல் போன்ற துயரமானது அந்த மகிழ்ச்சியைக் கரைத்து இல்லாமற் செய்துவிட்டது.

பார்க்கப் பார்க்க ஹனுமானுடைய கண்களுக்கு அந்த ஸ்திரீயின் தெய்வீகத் தோற்றத்தின் அழகும் தேஜஸும் வளர்ந்தன. 'ராமனுடைய பெருந்துக்கத்தின் காரணத்தை இப்போது கண்டேன். இவளை இழந்த எவன்தான் துயரப்படமாட்டான்? ராமன் தன் உயிரை வைத்திருப்பதே அற்புதம். எத்தகைய தேவி! எத்தகைய புருஷன்!' என்று எண்ணி எண்ணி ஹனுமானுடைய உள்ளம் அந்தச் சமயம் சமுத்திரத்துக்கு வடக்கேயிருந்த ராமனிடம் சென்றது.

அப்போது நீல வானத்தில் நிர்மலமான நீர் நிறைந்த ஏரியில் அழகிய அன்னம் மெதுவாகச் செல்



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ் குரூப்

வர்த்தக அலுவலகம்: 221, சத்தியமூர்த்தி சாலை, இராம் நகர்,
கோயமுத்தூர் - 641 009. போன்: 230463.

50 ஆண்டுகளுக்கு
மேலான
அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

குறுகிய கால டெபாசிட் — பிக்சட் டெபாசிட்

| காலம் | 1 நாள் முதல் 90 நாட்கள் முடிய | 91 நாட்கள் முதல் 180 முடிய | 181 நாட்கள் முதல் 365 முடிய | 12 மாதங்களுக்கு | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | | | 17% | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | | | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

## சுபிட்சம் வைப்புத் திட்டம்

**ரூ. 10,000/- செலுத்தினால் 45 மாதங்களில் ரூ. 21,000/- கிடைக்கிறது.**

ரூ. 10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்

## ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத்தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1310 | 2850 | 4680 | 6870 | 9490 |
| 250 | 3275 | 7125 | 11700 | 17175 | 23725 |
| 500 | 6550 | 14250 | 23400 | 34350 | 47450 |

## குமுலேட்டிவ் டெபாசிட் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும் போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்

செழுமை தரும் சேமிப்பு திட்டங்கள்! ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் - ஐசிஎஸ்!



"உன்னை ஓங்கி ஒரு அறை கொடுத்தாட்டுப் போறாரே, அவரு உனக்கு என்ன உறவு?"

"ஒண்ணு விட்ட' மாமாதான்!"

- கவிட் ரவி.

வதைப் போல் சந்திரன் வாயு புத்திரனுக்கு உதவி செய்வதற்காகவே வந்தது போல், உயரக் கிளம்பிப் பிரகாசித்தான்.

ஹனுமான் இலைகளிடையில் மறைந்து பார்த்துக் கொண்டும், இன்னது செய்வது என்று யோசித்துக் கொண்டும், கடல் மத்தியில் ஒரு பெருங்காற்றடித்து ஆடி அலையும் ஒரு பாரம் ஏற்றிய கப்பலைப் போல் கவலைக் கடலில் தத்தளித்துக் கொண்டிருந்த சீதையின் முகத்தை நன்றாகப் பார்த்தான். சுற்றிக் காவலிருந்த ராக்ஷஸிகளின் வடிவங்களோ பார்த்துப் பொறுக்க முடியாத கோர அவலக்ஷண வடிவங்கள். ஒருத்திக்கு ஒரே கண்; ஒருத்திக்கு ஒரே காது. சிலருக்குக் காதுகளே கிடையாது. சிலருக்கு மூக்கு இல்லை. சிலருக்கு மூக்கு ஊர்த்துவம் நோக்கி நின்றது. சிலருக்குத் தலையில் மயிரே கிடையாது. சிலருக்கோ விபரீதமான ஜடை; சிலருக்குக் கீழே தொங்கும் பெரிய வயிறு; சிலருக்கு ஒட்டகம் போன்ற உதடுகள். சிலர் கூனிகள். சிலர் குள்ளமானவர்கள்; சிலர் பனைமரம் போல் நீண்டு உயர்ந்து வளர்ந்தவர்கள். சிலருக்குப் பன்றி முகம், சிலருக்குப் புலி முகம், சிலருக்கு எருமை முகம், சிலருக்கு நரி முகம், சிலருக்கு ஆட்டு முகம். இப்படி இன்னும் பல பயங்கர அவலக்ஷண சொரூபங்களாக, சூலங்கள் முதலிய ஆயுதங்கள் பிடித்து அரக்கிகள் கூட்டமாக இருக்க, அவர்களுக்கு இடையில் தன் சீலம் ஒன்றாலேயே ரக்ஷிக்கப்பட்டவளாக, தரையில் ஆதரவற்றுப் படர்ந்து கிடக்கும் பூங்கொடி போல் ஜானகி வாடிய முகத்தோடு நடுங்கிக் கொண்டிருந்தாள்.

இப்படிக் காட்சி தந்த சீதா தேவியைப் பார்த்து, 'காணாமற் போனவளைக் கண்டு விட்டேனே' என்று ஹனுமான் மகிழ்ச்சி யடைந்தான். கூடவே, அவள் நிலையைப் பார்த்துத் துக்கப்பட்டான். அவளுக்காக வெகு தூரத்தில் அலைந்து துயரப் பட்டுக் கொண்டிருக்கும் ராம லக்ஷ்மணர்களை நினைத்தான்; அவர்களைத் தியானித்து நமஸ்கரித்தான்.

அச்சமயம் இன்னும் இருள் தீர்ந்து நன்றாக விடியவில்லை. வேத கோஷங்களாலும் இனிய சுப்பிரபாத கீதங்களாலும் ராவணன் படுக்கையிலிருந்து எழுப்பப்பட்டான். எழுந்தவுடன் சீதையை நினைத்துக் கொண்டு அவளை வைத்திருந்த நந்தவனத்துக்குக் கிளம்பினான்.

பரிவாரம் சூழ அந்தப்புரத்து நந்தவனத்துக்கு வந்தான். வாசனை வீசும் தீபங்களும், சாமரங்களும், குடையும் பிடித்துச் சென்ற பெண்கள் கூட்டத்துக்கிடையில் தானும் ஆபரணங்கள் பூண்டு பரிசுத்தமான வெள்ளை உத்தரீயம் ஒன்று தரித்துக் கண்ணைக் கவரும் இரண்டாவது மன்மதனைப் போல் ராவணன் வந்தான். வாயிலண்டை வந்த பரிவாரத்தின் கோஷமும், கூட்டமாக வந்த பெண்களின் பாதநூபுர ஓசையும் மாருதியின் காதில் விழுந்தன.

கொஞ்ச நேரத்தில் ராக்ஷச மன்னன் வருவதைக் கண்டான். உடனே ஹனுமான் அடர்ந்த இலைகளுக்குள்ளே முன்னை விட நன்றாக மறைந்து கொண்டான். ராவணன் சீதையிருக்குமிடம் வந்தான். ராவணனுடைய பலமும் பராக்கிரமமும் வீரியமும் தேஜஸும் அற்புதக் காட்சியாக இருந்தன. அவன் வருவதைக் கண்டவுடனே சீதையின் தேகம் சுருங்கிப் போய்விட்டது. பெருங்காற்றில் வாழை மரம் நடுங்குவது போல் நடுங்கினாள்.

(தொடரும்)

**பிழைத் திருத்தம் : 2.1.94 இதழில் வெளி வந்த சக்கரவர்த்தித் திருமகன் 53 வது பக்கம் பிரசுரமாகியுள்ள, ஹனுமான் லங்கா நகரத்துக்குள் 'வலது காலை' முன் வைத்துப் பிரவேசித்தான் என்பதை, 'இடது காலை' என்று திருத்திக் கொள்ள வேண்டும்.**

# உங்கள் கனவின் நிறைவு அவன் கண்களில்
# அவனது எதிர்காலம் உங்கள் கைகளில்



# குழந்தைகள் பரிசு வளரும் நிதி.

## உங்கள் அன்பைப் போலவே அது வளர்கிறது, வளர்கிறது, வளர்ந்து கொண்டே போகிறது.

நீங்கள் அவனது தேவை ஒவ்வொன்றையும் பார்த்து, பார்த்து பூர்த்தி செய்து, தினத்தின் ஒவ்வொரு நிமிடத்தையும் பாதுகாப்பாக உணரச் செய்கிறீர்கள். அவனது எதிர்காலத்தைப் பற்றி சிந்திக்க சிறந்த சமயமும் இதுதானே. உங்களின் இன்றைய சிறிது சிந்தனை உங்கள் கண்மணியின் வளமான எதிர்காலத்திற்கான பரிசாக மாறும். எப்படியா? இதோ நாங்கள் அளிக்கும் குழந்தைகள் பரிசு வளரும் நிதி. இதில் ஒரே முறையாக குறிப்பிட்ட தொகையை முதலீடு செய்யுங்கள் அல்லது ஆண்டுதோறும் சிறிது சிறிதாகவும் முதலீடு செய்யலாம். உங்கள் முதலீடும் வளர்ந்து கொண்டே வரும் உங்கள் கண்மணியின் வயது 21 ஆகும்வரை, அவன் லட்சாதிபதியாவதைக் காணலாம். இப்பரிசு எப்படி உபயோகமாகும் என்பதைக் காணுங்கள். உங்கள் கண்மணியின் மேல்படிப்பிற்கு அல்லது சொந்தமாக தொழில் தொடங்க உதவலாம் அல்லது அவன் சொந்தமாக வீடு வாங்கலாம். அவன் 18 வயதான பிறகு வருடத்திற்கு இரு முறை பணத்தை எடுக்கலாம், மீதமுள்ள முதலீடு 21 வயதாகும் வரை வளர்ந்து கொண்டே இருக்கும். குழந்தைகள் பரிசு வளரும் நிதி. ஒரு நாள் உங்கள் கண்மணி உங்களுக்கு நிச்சயமாக நன்றி செலுத்துவான்.

**14% டிவிடெண்ட்.
3 வருடங்களுக்கு
ஒருமுறை
போனஸ்.**

**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
*உங்கள் மேலான எதிர்காலத்திற்கென*

*எல்லா செக்யூரிட்டிகள் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க் கொண்டவையாகும். முதலீடு செய்வதற்கு முன் உங்கள் முதலீட்டு ஆலோசகர் அல்லது முகவரை கலந்தாலோசிக்கவும்.*

---

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
**கிளை அலுவலகங்கள்:** ● **கோயம்புத்தூர்.** போன்: 210395 ● **சென்னை.** போன்: 517101, 517190 ● **மதுரை.** போன்: 38186 ● **திருச்சி.** போன்: 32619.

Sista's UTI.131.93 TM C

# ஸ்யாமளி

''சியாமளி வரப் போகிறாள்.''

பக்கத்து வீட்டு மாமி, அம்மாவிடம் விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருந்தது காதில் விழ, 'ஜிவ்'வென்று ஓர் இனம் புரியாத எதிர்பார்ப்பு என்னுள் எழுந்தது.

மடத்தனமான நினைப்பு என்று புத்தி கட்டிக்காட்டினாலும் மனசு சமாதானமாகவில்லை.

எனக்கு ஒன்பது வயசு இருக்கும்போது தான் முதன் முதலாகப் பக்கத்து வீட்டுக்கு வந்தாள்.

பக்கத்து வீட்டு மாமியின் பையன் சுந்தர் தான் பெருமையுடன் அறிமுகப்படுத்தினான்.

''டேய், இது எங்க சியாமளி அக்கா.''

நான் அவளைப் பார்த்தேன்.

''உன் பெயர் என்ன?'' என்று கேட்டுத் தலையைச் சிலுப்பி விட்டாள்.

''மணி.''

''டிங்டிங் மணியா?'' என்று கேட்டதும் என் நண்பர்கள் சிரித்து, கேலிப் பார்வை பார்த்தனர்.

அவமானத்தில் முகம் சிவக்கத் தலை குனிந்தேன். லேசாய்க் கிண்டல் செய்தாலும் கண்ணில் நீர்திரளும் இரக்க சுபாவி நான்.

என் முக மாறுதலைக் கவனித்தவள் பதறிப் போனாள்.

''மன்னிச்சுக்கடா. இதுக்குப் போய் கண்கலங்கி... ப்சு'' என்று மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டாள்.

அந்தக் கதகதப்பில் என் அழுகை மறைந்து போய் பரவசமானேன். அப்படியே இருக்க மாட்டோமா என்ற ஏக்கம். சட்டென அவள் மேல் ஒரு பிரேமை.

அதற்குப் பிறகு அவள் அங்கிருந்த ஒரு மாசமும் நான் அவளைச் சுற்றியே வந்தேன். அவளுக்கும் என்னைப் பிடித்திருக்க வேண்டும்.

''மணி, எங்கேடா போயிட்டே?'' என்பாள், நான் கடைத் தெருவுக்கு அம்மா அனுப்பிப் போயிருந்தால்கூட...

கடைக்குப் போய் ஏதாவது சாமான் வாங்கி வந்தால், ஒரு சாக்லேட் லஞ்சமாய்க் கிடைக்கும் எனக்கு. அம்மாவுக்கும் எனக்குமிடையே உள்ள ரகசிய ஒப்பந்தம் இது.

'சின்னப் பசங்க சாக்லேட் சாப்பிட்டால் பல் சொத்தையாயிடும்' என்று அப்பா கண்டிப்பார். அதனால் அப்பாவுக்குத் தெரியாத பேரம் இது.

அதனால், கடைக்குப் போவதென்றால் என் மனசு இறக்கை கட்டும். கால்கள் சக்கரம் கட்டும்.

ஆனால், சியாமளி வந்த பிறகு சாக்லேட் கூட அற்பமாய்ப் பட்டது. அவள் கையைப் பிடித்தபடியே எந்நேரமும் நிற்பதும், சமயம் நேரும் போதெல்லாம் அவள்மேல் உரசியபடி உட்காருவதுமே என் முதல் கடமையாயிற்று.

சியாமளியோடு நானும் சுந்தரும் டூரிங் டாக்கீசில் படம் பார்க்கப் போனோம். 'மணாளனே மங்கையின் பாக்கியம்.'

படத்தைப் பார்க்காமல் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன் அந்த அரையிருட்டில்.

அவள் முகம் சிரிப்பதும் ரசிப்பதும் சோகமாக மாறுவதும் கண்டு பரவசம்.

''என்னடா?'' என்றாள் ஓரிரு முறை என் பார்வையின் உறுத்தலால்.

நான் சங்கோஜத்துடன் வெட்கமாய்ச் சிரித்தபடி தலைகுனிந்தேன். ஓரிரு நொடி கழித்து மீண்டும் பார்த்தேன்.

படம் முடிந்து வெளியே வந்ததும் சுந்தர் கேட்டான்.

''படத்தோட தலைப்புக்கு என்னக்கா அர்த்தம்?''

''நல்ல புருஷன் கிடைக்கறது கல்யாணம் பண்ணிக்கிற பொண்ணோட அதிர்ஷ்டம்.''

''நீ யாரைக் கல்யாணம் பண்ணிக்கப் போறே?'' என்றேன், பட்டென. மனசில் ஆடிக் கொண்டிருந்த ஊஞ்சல் சட்டென நின்றது பதிலை எதிர்பார்த்து.

''உன்னைத்தான். கட்டிக்கிறியா என்னை?'' என்றதும் தரையிலிருந்து ஓரடி உயர நடப்பதைப் போல உணர்ந்தேன். ஊஞ்சல் விசிறி விசிறிப் பறந்தது வேகமாய்.

பலமாய்த் தலையாட்டினேன் சரியென்று.

அவள் சிரிப்புடன் என்னைப் பக்கவாட்டில் கைநீட்டி அணைத்துக் கொண்டாள்.

அந்த வினாடி உலகின் பெரிய அதிர்ஷ்டசாலியாய் உணர்ந்தேன்.

அதன் பிறகு அவளோடு பழகும்போது கூடுதல் உரிமையாய் உணர்ந்தேன்.

''ஸ்யாமளி அக்கா ஏற்பாடு'' என்றேன் நெஞ்சை நிமிர்த்தி.

அடுத்த இரண்டு நாட்களில் அவள் ஊருக்குப் போவதாய்ச் சுந்தர் வந்து சொல்ல, அதிர்ந்து போனேன்.

அந்த வருடம் பரீட்சையில் நான் ஃபெயில் என்று சொன்னதுபோல ஒரு



அடுத்த நாள் பிள்ளையார் சதுர்த்தி.

இந்த வருடம் ஸ்யாமளியின் மேற்பார்வையில் பிள்ளையார் அலங்காரம் நடந்தது. பலகைக்குப் பதிலாய் ஒரு சிறு ஸ்டூல் கிடைத்தது. அதில் கோலம் போட்டு, நாலு பக்கமும் மாவிலைக் கொத்தைச் சணலால் கட்டி, கலர் பேப்பர் ஒட்டி, பொம்மைக் குடை ஒன்றைப் பிடித்தபடி பிள்ளையார் அமர்க்களமாய்க் கிளம்பினார்.

எல்லாம் அவள் கைவண்ணம்.

அதை நானும் சுந்தரும்தான் தூக்கினோம்.

''என்னடா, அலங்காரம் இந்த வருஷம் பிரமாதமாயிருக்கு?''

என்று கோடி வீட்டு நடராஜன் மாமா சொன்னதும் என் முகம் பெருமையில் ஜொலித்தது.

துக்கம்; பாரம்!

அந்தக் கடைசி இரண்டு நாட்களிலும் சாப்பாடே செல்லவில்லை. அம்மா கூட கவலையுடன் கேட்டாள்.

''என்னடா, வயிறு உப்புசமா இருக்கா? பூச்சி, கீச்சி வயித்துல இருக்கோ என்னமோ? அப்பா வந்ததும் டாக்டரிடம் கூட்டிட்டுப் போகச் சொல்லணும்.''

ஆனால் என் கவலை முன் அம்மாவின் கவலை ஒன்றுமேயில்லாததாய்ப் பட்டது.

எதிர்வீட்டு சதாசிவம் கூடக் கேட்டான், என்னிடம்.

''ஏன்டா, இப்படி 'டல்'லாய் இருக்கே?''

**கிருஷ்ணா**

யாரிடமாவது என் மனத்தைக் கொட்டிவிடத் துடித்தது.

அவனிடம் கொட்டி விட்டேன்.

## அருள்வாக்கு

சித்த சுத்திக்குப் பயன்படுகிற சின்னச் சின்ன விஷயங்கள் பல உண்டு. இந்தச் சின்னச் சின்ன தர்மங்களை நம்முடைய பெரியவர்கள் தலைமுறை தத்துவமாக அனுசரித்து வந்தார்கள். அவர்கள் வாழ்க்கையில் திருப்தியும் சந்தோஷமும் நிறைந்திருந்தன. அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள் என்று பார்த்து, அதை நாம் பின்பற்றினாலே போதும். புதிதாக ஒரு கொள்கையும் வேண்டாம். நாமும் சந்தோஷமாக, திருப்தியாக இருக்கலாம்.

பெரிய அத்யாத்ம விஷயங்களில் மட்டுமில்லாமல், ஒரு சமுதாயத்தில், ஒரு குடும்பத்தில் நடந்து கொள்ள வேண்டிய முறைகளில்கூட நமக்கு முன் வாழ்ந்த பெரியவர்கள் அற்புதமாக வழிகாட்டியிருக்கிறார்கள். உதாரணமாக உறவு, சிநேகிதம் எல்லாம் அந்த நாளில் வெகு உயர்ந்த முறையில் காப்பாற்றப்பட்டன. ஒரு கலியாணம், அல்லது அபரகாரியம் (இறுதிச் சடங்கு) என்றால் பலர் ஒன்று சேர்ந்து செலவு செய்து நடத்திக் கொடுப்பது என்று வைத்துக் கொண்டிருந்தார்களே, அது எவ்வளவு உயர்ந்த பண்பு?

ஒரு கூட்டத்திலே பலர் கொஞ்சம் கொஞ்சம் கொடுத்தால் போதும். கொடுக்கிறவர்களுக்குப் பெரிய சிரமம் ஏதும் இல்லை. ஆனால் வாங்குகிறவனுக்கு மொத்தத்தில் கணிசமாகக் கிடைக்கும். இப்படித்தான் ஓர் ஏழைக்குக் கஷ்டம், அவன் ஒரு கலியாணம் செய்ய வேண்டும்

''சியாமளியை நான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்டா. அவளே கூட சொன்னா. இப்ப திடீர்னு ஊருக்குப் போறா'' என்றதும் என்னை வியப்புடன் பார்த்தான்.

''போடா முட்டாள். அக்கா எவ்வளவு பெரியவங்க. நீ எப்படிடா கல்யாணம் பண்ணிக்க முடியும்?''

அவன் கேள்வி நியாயமாய்ப் பட்டது. இருந்தாலும் உள்ளத்தின் உள்ளே இதை ஏற்க மறுத்தது.

அவனிடம் மேலே பேசப் பிடிக்கவில்லை.

அவள் ஊருக்குப் போன அன்று என் அழுகையை யாராலும் அடக்க முடியவில்லை.

''என்னை மறந்துட மாட்டியேடா மணி?'' என்று அவள் கேட்ட கேள்விதான் என் கண்ணின் அணையை உடைத்தது.

அவளே இதை எதிர்பார்க்கவில்லை.

''என்னடி, இந்தப் பிள்ளை இப்படி அழறது, நீ ஊருக்குப் போறதைப் பார்த்து?'' என்றாள் மாமி.

''பேசாம, இவனை, சியாமளிக்கு இப்பவே கல்யாணம் பண்ணிக் கொடுத்து இரயில் ஏத்திவிட்டுடுவோமா?'' என்றார் அப்பா.

உடனே கூடியிருந்த அனைவரும் சிரித்து விட்டனர். ஆனால் என் மனத்தில் கரும்புச் சாறாய் இனித்தது அப்பாவின் வார்த்தைகள்.

அந்த சியாமளி மீண்டும் வரப் போகிறாள். மாமியின் அக்கா பெண் அவள். நடுவில் அவள் அப்பாவின் உத்தியோகம், இன்னும் பல காரணங்களால் எங்கெங்கெல்லாமோ சுற்றி, இப்போதுதான் இங்கு வரப் போகிறாள்.

இப்போது நான் பி. காம் செகண்ட் இயர் படிக்கிறேன். ஆனாலும் ஏதோ ஒரு குருட்டு யோசனை.

சியாமளி என்னை ஞாபகம் வைத்திருப்பாளா? அவள் எப்படி இருப்பாள் என்பதே நினைவில் இல்லை.

ஆனால், முதன் முதலில் ஒரு பெண்ணாய் என் மனத்தில் கவர்ச்சியை விதைத்தவள், அந்த ரெண்டுங்கெட்டான் வயதில்!

''என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறியாடா, மணி?''

பலமாகத் தலையசைத்து வாக்குக் கொடுத்திருக்கிறேன் புரியாத வயதில். அது இப்போதும் கட்டுப்படுத்துமா என்னை?

எட்டரை மணி எக்ஸ்பிரஸ் ரயிலில் சியாமளி வந்துவிட்டாள்.

நான் கூச்சத்துடன் ஜன்னல் வழியே பார்த்தேன். சியாமளி நன்கு வளர்ந்து உயரமாய் இருந்தாள். ஈர மணல் நிறம். அம்மை வடு முகம். இருபத்தேழு வயதிருக்குமா?

என்னுள்ளிருந்த பிம்பம் லேசாய்க் கலைந்து, காற்றில் ஆடும் சீட்டுக்கட்டு மாளிகையானது.

சியாமளியா இவள்?

அரை மணி நேரம் கழித்து எங்கள் வீட்டுக்கு வந்தாள்.

''மாமி சௌக்கியமா? எங்கே மணி? எவ்வளவு வருஷமாச்சு பார்த்து? அவன் அன்னிக்கு அழுதது இன்னும்கூட மறக்க முடியலே'' என்றாள்.

அப்படியானால் ஞாபகம் வைத்திருக்கிறாள் என்னை. என் வாக்கை?

''நீயா மணி? டேய்... என்னடா இப்படி வளர்ந்துட்ட ஒட்டடைக் குச்சி மாதிரி?''



என்றால் அல்லது அபர காரியம் செய்ய வேண்டும் என்றால் மற்றவர்கள் எல்லாரும் கொஞ்சம் கொஞ்சம் உதவி செய்து, அந்தக் காரியத்தை நடத்திக் கொடுத்து வந்தார்கள். முன்னாட்களில், பந்துக்களுள் ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் அதிகம் இல்லை. பணக்காரனாக இருப்பவன் ஏழையான பந்துவுக்கே அதிக உதவி செய்வான். இதெல்லாம் தர்மத்தைச் சேர்ந்தது. சிரமத்தில் உள்ளவர்களுக்கு உதவி செய்வது, உதவி பெறுகிறவனைவிட உதவி செய்கிறவனின் சித்த சுத்திக்கே அதிகம் உதவும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

என்று அருகில் வந்து உரிமையுடன் என் தலையைச் சிலுப்பி விட்டாள்.

அவள் மாறவேயில்லை. ஆனால் நான்?

எனக்குள் பயம் கலந்த உணர்ச்சி.

''அன்னிக்குச் சொன்னியே சரின்னு. இப்ப நான் வந்திருக்கிறதே உன்னைக் கல்யாணம் பண்ணிக்கத்தான்.''

கேட்டு விடுவாளோ?

ச்சே! என்ன ஒரு பைத்தியக்காரத்தனமான பயம்?

''என்னடா இப்படி வெட்கப்படறே? என் கையை விடாம பிடிக்கண்டே நிற்பாய்?'' என்று கிண்டல் செய்ததும் தலை குனிந்தேன்.

அவள் எதையுமே மறக்கவில்லை. ஆனால் அவளது உருவம் எனக்குள்ளிருந்த பிரேமையை உடைத்துவிட்டது.

''நாளைக்கு டெஸ்ட் இருக்கு'' என்றபடி ரூமுக்குள் புகுந்து ஒளிந்து கொண்டேன்.

சியாமளியைப் பெண் பார்க்க வரப் போகிறார்களாம் இன்று மாலை. அம்மா சொன்னதும் இதயத்தில் இனம் புரியாத அமைதி. அம்மாடி! நல்லவேளை!

''பாவமடா சியாமளி! கிட்டத்தட்ட ஆறு வருஷமா மாப்பிள்ளை பார்க்கிறா அவங்க வீட்டுல, கடவுள் கண் திறக்கலே. ஊர் மாறி வந்தாலாவது அதிர்ஷ்டம் கைகூடி வருதான்னு பார்ப்போம்!'' என்றாள் அம்மா.

அன்று மாலை பக்கத்து வீட்டில் ஒரே பரபரப்பு. அம்மா முழுநேரமும் அங்குதான். இரவு ஏழரைக்குத்தான் திரும்பினாள்.

''இந்தாடா மணி கேசரி'' என்று நீட்டினாள்.

''மாப்பிள்ளை பார்த்துட்டு என்ன சொன்னார்?'' என்றேன் கேசரியைக் கையிலெடுத்து.

''ப்ச்!'' என்றாள் அம்மா சோகமாய்.

கேசரியை உண்ண மனசு ஒப்பவில்லை அதற்குமேல்.

எழுந்து மொட்டை மாடிக்குச் சென்றேன். மனசுக்குள் ஏனோ துக்கம். குறுகுறுப்பு.

மாமி வீட்டு மாடியில் யாரோ சோகமாய் நின்று கொண்டிருப்பது தெரிந்தது நிலவொளியில்.

இரு வீட்டு மாடிகளுக்கும் இடையே சுவரோ, இடைவெளியோ கிடையாது. அந்தக் காலத்து வீடுகள்.

சற்று அருகில் சென்றேன்.

சியாமளிதான். தனியாய்... துயரமான பிம்பமாய்.

என் காலடியோசை கேட்டுத் திரும்பினாள்.

''நீயா மணி?'' என்றாள்.

என் பார்வையின் ஆறுதல், அக்காவின் உள்ளத்தை வருடியிருக்க வேண்டும்.

''முடியலே மணி. இதுவரை ஐம்பது, அறுபது தடியன்கள் காலில் விழுந்துட்டேன். அம்மை வடு மூஞ்சின்னது என் தவறா? கடவுள் ஏன் என்னை மட்டும் இப்படிச் சபிச்சிருக்கார்?''

குலுங்கி அழும் அவளைத் தேற்ற வழி தெரியாமல் திகைத்துப் போனேன்.

அவளைத் தொட்டு, அணைத்து ஆறுதல் சொல்ல வேண்டும் போல ஓர் எண்ணம். வளர்ந்துவிட்ட என் வயது தடுத்தது. மெல்ல கூப்பிட எத்தனித்தேன்.

''மணி'' என்று அருகில் வந்து என் இரு கைகளுக்குள் முகம் பொத்தி அழுதாள். அவள் கண்ணீர் கையை நனைக்க, நான் சிலையாய் நின்றேன்.

சட்டென ஓர் ஏக்கம்.

''சியாமளிக்கு முன் பிறந்திருக்கக் கூடாதா நான்?''

**அமரர் கல்கி**

# தியாக பூமி

## 30. பாட்டு வாத்தியார்

**ச**ம்பு சாஸ்திரி நெடுங்கரையை விட்டுக் கிளம்பிய போது அவருடைய மனம் எண்ணாததெல்லாம் எண்ணிற்று.

அவரை ஊரார் சாதிப் பிரஷ்டம் பண்ணி வைத்து, தீபாவளிக்கும் மாப்பிள்ளை வராமற் போனதிலிருந்து சாஸ்திரி மனம் சோர்ந்து போயிருந்தார். சாவித்திரியைப் புக்ககத்துக்கு அனுப்பிய பிறகு அவருடைய மனச் சோர்வு அதிகமாயிற்று. வீட்டிலே சாவித்திரி இல்லை. வெளியிலே நல்லான் இல்லை. முன்னைப் போல் பஜனைகளும் உற்சவங்களும் நடப்ப தில்லை. இதனாலெல்லாம் நெடுங்கரை வாசமே அவருக்கு வெறுத்துப் போயிருந்தது. ஆனாலும் ஊரை விட்டுக் கிளம்பும் போது, அவருடைய இருதயம் ஏன் இவ்வளவு வேதனை அடைய வேண்டும்?

'கூடாது; இத்தகைய பாசம் கூடாது. நம்மை இந்தப் பாசத்திலிருந்து விடுவித்து ரக்ஷிப்பதற்காகத்தான் அம்பிகை இவ்வாறு மாமியாரின் வாக்கின் மூலமாக ஆக்ஞாபித்திருக்கிறாள்' என்று எண்ணி மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு கிளம்பினார்.

க்ஷேத்திர யாத்திரை செய்ய வேண்டுமென்ற விருப்பம் சாஸ்திரிக்கு வெகு காலமாக இருந்தது. அந்த விருப்பம் நிறைவேறுவதற்கு இப்போது சந்தர்ப்பம் வாய்த்தது. சிதம்பரம், திருவண்ணாமலை, காஞ்சிபுரம் முதலிய க்ஷேத்திரங்களுக்குச் சென்று, அங்கெல்லாம் இரண்டு மூன்று நாள் தங்கி, ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டு, கடைசியாகச் சென்னைப் பட்டினம் வந்து சேர்ந்தார்.

சென்னையில் முதலில் அவருக்குத் திக்குத் திசை தெரியவில்லை. அப்புறம், கோவில்களை வைத்து ஒருவாறு அடையாளம் கண்டுபிடிக்கத் தெரிந்து கொண்டார். கபாலீசுவரர் கோவில், பார்த்தசாரதி கோவில், கந்தசாமி கோவில், ஏகாம்பரேசுவரர் கோவில் ஆகியவற்றில் ஸ்வாமி தரிசனம் செய்து பரவசமானார். அப்புறம் வந்த காரியத்தைக் கவனிக்கத் தொடங்கினார்.

சம்பு சாஸ்திரி கிராமத்தில் பெரிய பிராகதாராயிருந்தவர். எல்லாருக்கும் உதவி செய்து அவருக்குப் பழக்கமே தவிர, ஒருவரிடம் போய் நின்று ஓர் உதவி கேட்டு அறியாதவர். மேலும் இயற்கையிலேயே சங்கோச சுபாவமுடையவர். அடித்துப் பேசிக் காரியத்தை முடித்துக் கொள்ளும் சக்தி அவருக்குக் கிடையாது.

அப்படிப்பட்டவர், முன் பின் தெரியாதவர்களின் வீடு ஏறிச் சென்று அவர்களிடம் ஒரு காரியத்தைக் கேட்பது என்றால், இலேசான காரியமா? ஆனாலும், சாஸ்திரி பகவான்மேல் பாரத்தைப் போட்டு, நெஞ்சைத் திடப்படுத்திக் கொண்டு, இந்தக் காரியத்தைத் தொடங்கினார்.

காரியத்தில் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை மட்டும் அவருக்கு இல்லை. "நாகரிகம் மிகுந்த இந்தப் பட்டணத்திலேயாவது, பட்டிக்காட்டு மனுஷனாகிய நமக்குப் பாட்டு வாத்தியார் வேலை கிடைக்க வாவது?" என்ற அவ நம்பிக்கை அவருடைய மனத்துக்குள் கிடந்தது. அவருக்கே தம்மிடம் நம்பிக்கை இல்லாதபோது மற்றவர்களுக்கு எப்படி நம்பிக்கை உண்டாகப் போகிறது?

சிலர் சம்பு சாஸ்திரியின் தோற்றத்தைப் பார்த்ததுமே அவருக்குச் சங்கீதம் எங்கே வரப்போகிறது என்று தீர்மானித்து விட்டார்கள். ஒரு பெரிய மனுஷர் சம்பு சாஸ்திரியை ஏற இறங்கப் பார்த்து விட்டு, "ஏன் ஸ்வாமி! உங்க ஊரிலே சங்கீதத்தைத் தராசிலே நிறுத்துக் கொடுக்கிறதா, மரக்காலிலே அளந்து கொடுக்கிறதா?" என்று கேட்டார்.

இந்தக் கேள்வி சம்பு சாஸ்திரியின் மனத்தை ரொம்பவும் உறுத்திற்று. கர்நாடக சங்கீதத்தின் ஜீவஸ்தானமாகிய சோழநாட்டில் அவர் பிறந்தவர். குழந்தைப் பிராயத்திலிருந்து மகா வித்வான்களுடைய சங்கீதத்தைக் கேட்டுக் கொண்டே வளர்ந்தவர். அப்படிப்பட்டவரைப் பார்த்து, இந்த மெட்ராஸ்காரன், தன்னிடம் பணம் இருக்கிற திமிரினால்தானே இப்படிக் கேட்டான்? "ஆமாம்; சங்கீதத்தைப் பணங்கொடுத்து வாங்குகிற இடத்திலே, மரக்காலில் அளந்தோ தராசில் நிறுத்தோதான் கொடுப்பார்கள். எங்கள் ஊரில் இப்படிக் கிடை



யாது.'' - இந்த மாதிரி சம்பு சாஸ்திரி சொல்லவில்லை; அந்த வீட்டைவிட்டுப் போகும் போது மனத்திற்குள் நினைத்துக் கொண்டு போனார்.

இன்னொரு பெரிய வக்கீலின் வீட்டில் பாட்டு வாத்தியார் வேண்டுமென்பதாகக் கேள்விப்பட்டுச் சம்பு சாஸ்திரி அந்த வீட்டுக்குள் சென்றார்.

வக்கீல் அவரைப் பார்த்ததும், யாரோ பட்டிக்காட்டிலிருந்து வந்திருக்கும் கட்சிக்காரன் என்று நினைத்துக் கொண்டார். ''என்ன, ஐயா! ஏதாவது கேஸ், கீஸ் உண்டா?'' என்று கேட்டார்.

''இல்லை - வந்து - கொஞ்சம், எனக்குச் சங்கீதம் தெரியும். ஆத்திலே குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுக்கச் சொன்னால்....''

வக்கீலுக்குக் குஷி பிறந்துவிட்டது. ''என்ன, சங்கீதமா? நீரா? நாசமாய்ப் போச்சு!'' என்று அவர் விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்துவிட்டார்.

அவருடைய சிரிப்பின் தாத்பர்யத்தைச் சம்பு சாஸ்திரி தெரிந்து கொண்டு, ''வேணும்னா, பாடிக் காட்டுகிறேன்'' என்றார்.

''பாடிக் காட்டுகிறீரா? நீரா?'' என்றார் வக்கீல். உடனே, ''சௌந்தரம்! சௌந்தரம் இங்கே வா! ஒரு பிராமணன் பாடறேன்னு வந்திருக்கார்'' என்றார். இந்த வேடிக்கையைத் தாம் மட்டும் அநுபவிப்பதில் அவ

ருக்குத் திருப்தி இல்லை, தமது மனைவியும் கூட இருந்து அநுபவிக்க வேண்டும் என்று எண்ணினார்.

அவருடைய மனைவி வந்தாள். கூட அவளுடைய புதல்வியும் வந்தாள். ''இவரா பாடப் போகிறார்?'' என்று சௌந்தரம் கேட்டாள்.

''ஆமாம்! எங்கே உம்ம பாட்டை அவிழ்த்து விடுங்காணும்!'' என்றார் வக்கீல்.

சம்பு சாஸ்திரி ஒரு கீர்த்தனம் பாடினார். அக்ஷர சுத்தமாகவும், சாஸ்திர ரீதியாகவும், உருக்கம் கொடுக்கும் அற்புதமாய்ப் பாடினார்.

பாட்டின்போது ஒரு தடவை தாயாரைப் பார்த்துப் பெண் சிரித்தாள். ஏனென்றால், அந்தக் கீர்த்தனத்தை ஏற்கெனவே அந்தப் பெண் ஒரு பாட்டு வாத்தியாரிடம் கற்றுக் கொண்டிருந்தாள். அந்த மாதிரி இல்லாமல் இவர் தப்பாய்ப் பாடுகிறார் என்று பெண் சமிக்ஞையாகச் சிரித்தாள். தாயார், சமிக்ஞையிலேயே, ''பேசாமலிரு'' என்று பெண்ணை அடக்கினாள்.

பாட்டு முடிந்ததும், வக்கீல் நிதானமாக,, ''ஏன் ஸ்வாமி! நீர் இப்ப பாடியது பாட்டா, தெவச மந்திரமா?'' என்று கேட்டார். அவருடைய மனைவி, ''வித்வானைப் பார்த்து அப்படியெல்லாம் சொல்லாதேயுங்கோ, உங்களுக்குப் பிடிக்கலேன்னா, வேண்டான்னுட்டுப் போங்களேன்!'' என்றாள். சம்பு சாஸ்திரி எழுந்து வெளியே சென்றார்.

மற்றொரு பெரிய மனிதர் வீட்டில், சாஸ்திரிக்கு ஆர்மோனியப் பெட்டி வாசிக்கத் தெரியுமா என்று கேட்டார்கள். தெரியாது என்றதும் போகச் சொல்லி விட்டார்கள். ஒரு செட்டியார், ''பிளேட் கிளேட் கொடுத்திருக்கீமா? ரேடியோவிலோ, கீடியோவிலோ பாடியிருக்கீமா?'' என்று கேட்டார். சாஸ்திரி, ''இல்லை'' என்றதும், ''சரிதான், போய் வாரும்'' என்று சொல்லி விட்டார்.

இம்மாதிரி வீடு வீடாகவும் பங்களா பங்களாவாகவும் நுழைந்து வெளியே வந்து சாஸ்திரி ரொம்பவும் அலுத்துப் போனார். அவர் மனம் ரொம்பவும் சோர்ந்துவிட்டது. ஒரு நாள் அவர் ஒரு பெரிய பங்களாவுக்குள் நுழைந்த போது, 'இதுதான் கடைசி தடவை; இந்த இடத்தில் நமக்கு வேலை கிடைக்காவிட்டால், பகவானுக்கு விருப்பமில்லை என்று தீர்மானிக்க வேண்டியது தான்' என்று எண்ணிக் கொண்டு சென்றார்.

அந்தப் பங்களாவின் எஜமானர் அப்போது பங்களாவின் முன் வாசல் தோட்டத்தில் தம் சிநேகிதருடன் உட்கார்ந்து சிற்றுண்டி அருந்திக் கொண்டிருந்தார். சம்பு சாஸ்திரியை அங்கேயே உட்காரச் சொல்லி, ''எங்கே, பாடுங்கள் பார்க்கலாம்'' என்றார்.

இவர்களுக்கு என்ன பாட்டுப் பாடினால் பிடிக்கும் என்று சாஸ்திரி சற்று யோசித்தார், கடைசியில் அம்பிகையைத் தியானம் செய்து கொண்டு, ''சிருங்கார லஹரி'' என்ற கீர்த்தனத்தைப் பாடி, அதற்கு ஸ்வரமும் விஸ்தாரமாகப் பாடத் தொடங்கினார்.

பங்களாவின் எஜமானர் பாட்டை, நடுவிலேயே நிறுத்தி விட்டார். ''இந்தக் காலத்திலே உங்க சங்கீதமெல்லாம் செல்லாது, ஸ்வாமி! இப்போ 'டேஸ்டெ'ல்லாம் மாறியிருக்கு. கொஞ்சம் இந்துஸ்தானி - கிந்துஸ்தானி அப்படியிருக்க வேண்டும்; போய் வாரும்'' என்று சொல்லி அனுப்பினார்.

ஆனால், சாஸ்திரி அங்கே பாடிய பாட்டை ஓர் ஆத்மா அநுபவித்துப் பரவசப் பட்டுக் கொண்டிருந்தது. அவன், நல்லானுடைய மைத்துனன் சின்னசாமிதான். இந்தப் பங்களாவில் சின்னசாமி தோட்ட வேலை செய்து கொண்டிருந்தான். பாட்டைக் கேட்டுவிட்டு அருகில் வந்து பார்த்து, 'நம்ம நெடுங்கரை சாஸ்திரி ஐயா!' என்று அவன் தெரிந்து கொண்டு, 'இவர் எப்படி இங்கே வந்தாரு?' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தான்.

ஆகவே, சாஸ்திரி திரும்பி வெளியே சென்று கொண்டிருந்தபோது, அவன் ஓடி வந்து விழுந்து நமஸ்காரம் செய்து, ''சாமி! சாமி! என்னைத் தெரியுதுங்களா?'' என்று கேட்டான்.

சாஸ்திரிக்கு அந்தப் பங்களாவில் உண்டாகியிருந்த ஏமாற்றத்தினால், மனம் குழம்பிப் போயிருந்தது. இவனை எங்கே அடையாளம் தெரியப் போகிறது?

''யார் தெரியவில்லையே, அப்பா!'' என்றார்.

''நான்தானுங்க, நல்லானுக்கு மச்சான், சின்னசாமி. இப்பத் தெரியுதுங்களா?'' என்றான்.

''ஞாபகம் வருகிறது. நல்லான் எங்கே அப்பா இருக்கான்? சௌக்கியமா இருக்கானா?'' என்று சாஸ்திரி கேட்டார்.

நாங்க எல்லாரும் சாவடிக்குப்பத்திலே இருக்கோமுங்க. அவரு எப்போதும் உங்களைப் பத்தியும் உங்க நல்ல குணத்தைப் பத்தியுமே பேசிக்கிட்டிருப்பாருங்க. நீங்க அவசியம் வந்துட்டுப் போகணுங்க!'' என்றான்.

''அதுக்கென்னப்பா, பார்க்கலாம்! எங்கே இருந்தாலும் சௌக்கியமாயிருந்தால் சரி'' என்று சாஸ்திரி சொல்லிவிட்டு மேலே நடந்தார்.

''சாவடிக்குப்பங்க, கட்டாயம் வார்றணுங்க'' என்று சின்னசாமி கூவினான்.

'ஸ்வாமி! ஸ்வாமி! இந்தத் திக்கற்ற நிலைமையில் நான் பட்டிக்கார நல்லானிடத்திலே போக வேண்டுமா? அவனிடம்




என்னை வைத்து ரக்ஷிக்கும்படி கேட்க வேணுமா? வேண்டாம்! வேண்டாம்! இந்த உலக வாழ்க்கையே இனிமேல் வேண்டாம்! பூணூலை அறுத்து எறிந்துவிட்டுக் காஷாயம் கட்டிக் கொள்ள வேண்டியது; சாப்பாடு கிடைத்த இடத்தில் சாப்பிட வேண்டியது; திறந்த வெளியில் தூங்க வேண்டியது; பகவானுடைய பெயரைச் சொல்லிக் கொண்டு ஊர் ஊராய்ப் போக வேண்டியது. க்ஷேத்திரங்களைத் தரிசிக்க வேண்டியது. இத்தனை நாளும் கிருகஸ்தாசிரமம் நடத்தியதெல்லாம் போதும்; மற்றவர்களுக்காகக் கவலைப் பட்டதும் போதும். இனிமேலாவது நாம் போகிற வழிக்குக் கதி தேடிக் கொள்வோம்.'.... இந்த மாதிரி யோசனை செய்து கொண்டு சாஸ்திரி மேலே நடந்தார்.

## 31. மீனாக்ஷி ஆஸ்பத்திரி

சாவித்திரி நெடுங்கரைக்கு வந்து வீடு பூட்டியிருப்பதைப் பார்த்துவிட்டுத் திரும்பி இருபது நாளைக்கு மேலாயிற்று. இப்போது அவள் சென்னையில் மீனாக்ஷி ஆஸ்பத்திரியில் படுத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய கட்டிலுக்குப் பக்கத்திலிருந்த சிறு தொட்டிலில் - கையால் இலேசாக ஆட்டக்கூடிய தொட்டிலில் - ஒரு பெண் குழந்தை கிடந்தது. கனவில் அல்ல; உண்மையாகவேதான். மூக்கும் முழியுமாய்க் குழந்தை நன்றாயிருந்தது. பிறந்து பத்து நாள்தான் ஆகியிருந்தாலும் ஒரு மாதத்துக் குழந்தை போல் தோன்றிற்று.

குழந்தை அப்போது தன்னுடைய வலது கையின் விரல்களை ருசி பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்தது. அதிலிருந்து உண்டான 'த்ஸ—' 'த்ஸ—' என்ற சப்தம் சாவித்திரியின் காதில் விழுந்தபோது அவளுடைய முகம் சிறிது மலர்ந்தது. உடனே, திரும்பிக் குழந்தையைப் பார்த்தாள். மலர்ந்த முகம் சுருங்கிற்று. இந்தக் குழந்தையின் காரணமாக என்னென்ன கஷ்டங்களையெல்லாம் அநுபவிக்க நேர்ந்தது? அவையெல்லாம் ஒரு மகா பயங்கரமான சொப்பனத்தைப் போல் சாவித்திரியின் நினைவில் வந்தன. அந்தச் சம்பவங்களை மறந்து விடுவதற்கு அவள் எவ்வளவோ முயன்று பார்த்தாள். அவற்றை நினைத்துப் பார்ப்பதில்லையென்று பல்லைக் கடித்துக் கொண்டு, மனத்தை உறுதி செய்து கொண்டாள். அது ஒன்றும் பயன்படவில்லை. திரும்பத் திரும்ப அந்த நினைவுகள் வந்து கொண்டுதான் இருந்தன.

நெடுங்கரையிலிருந்து சாவித்திரி உடனே திரும்பிச் சென்னைக்கு டிக்கட் வாங்கிக் கொண்டு ரயில் ஏறியபோது, அவளுடைய மனத்தில் கவலையும் பயமும் இல்லாமலில்லை. 'அந்தப் பெரிய பட்டணத்தில் போய் அப்பாவை எப்படித் தேடுவோம்? அதுவும் இந்தப் பலஹீனமான ஸ்திதியில்?' என்று அவளுடைய நெஞ்சு பதைபதைத்துக் கொண்டுதான் இருந்தது. ஆனாலும் இவ்வளவு பயங்கரமான கஷ்டங்களை எல்லாம் அநுபவிக்க நேரிடுமென்று லவலேசமும் அவள் எதிர்பார்க்கவில்லை.

''பாட்டு வாத்தியார் சம்பு சாஸ்திரி வீடு தெரியுமா?'' என்று எத்தனை இடங்களில் எத்தனை பேரைக் கேட்டிருப்பாள்? அவர்களில் சிலர், ''பாட்டு வாத்தியாரையும் தெரியாது; சம்பு சாஸ்திரியையும் தெரியாது; போ! போ!'' என்று கடுமையாகப் பதில் சொன்னார்கள். இம்மாதிரி பதில்களைக் கேட்கும்போதெல்லாம், 'ஜனங்கள் ஏன் இவ்வளவு இரக்கமற்றவர்களாயிருக்கிறார்கள்?' என்று சாவித்திரி ஆச்சரியப்படுவாள். பட்டணங்களிலே வசிக்கும் ஜனங்களின் இடைவிடாத வேலைத் தொந்தரவும், அதனால் சின்னஞ் சிறு விஷயங்கூட அவர்களுக்கு எரிச்சல் உண்டு பண்ணிவிடுவதும் சாவித்திரிக்கு எவ்வாறு தெரியும்? மேலும், பூரண கர்ப்பவதியான ஓர் இளம் பெண் இந்தமாதிரி தன்னந் தனியாக அலைவதைக் கண்டவுடனேயே, ஜனங்களுக்கு அவள் பேரில் இல்லாத சந்தேகங்கள் எல்லாம் ஏற்பட்டு, அருவருப்பு உண்டாவது சகஜம் என்பதைத்தான் சாவித்திரி எப்படி அறிவாள்?

ஆனால், எல்லாருமே இப்படி நடந்து கொள்ளவில்லை. சிலர் அவளிடம் இரக்கமும் காட்டினார்கள். ''நீ யாரம்மா? எந்த ஊர்? இந்த நிலைமையிலே ஏன் இப்படி அலையறே?'' என்றெல்லாம் விசாரித்தார்கள். ஜனங்களுடைய கோபத்தையும் கடுமையையுமாவது சகித்துக் கொள்ளலாம் போல் இருந்தது; ஆனால், இந்த இரக்கத்தைச் சாவித்திரியினால் சகிக்க முடியவில்லை. அவர்களுடைய விசாரணைக்குப் பதில் சொல்லவும் அவளுக்குப் பிடிக்கவில்லை.

'அப்பா இருக்கிற இடந் தெரிந்தால் சொல்லட்டும்; இல்லாமற்போனால் பேசாமலிருக்கட்டும். இவர்களை இதையெல்

லாம் யார் விசாரிக்கச் சொன்னது?' என்று எண்ணினாள்.

கடைசியில், அவளை அந்த மாதிரி விசாரித்த இடம் ஒரு போலீஸ் ஸ்டேஷன். இங்கே அவள் எப்படி வர நேர்ந்தது என்பதும், ஸ்டேஷனில் நடந்தவையும் அவளுக்கு ஏதோ பூர்வ ஜன்மத்து ஞாபகம் போல் தெளிவின்றித் தோன்றின.

**பா**ட்டு வாத்தியார் சம்பு சாஸ்திரியைத் தேடித் தேடி அலைந்து, கால் கை சோர்ந்து, கண்ணும் இருளடைந்து வந்த சமயத்தில், சாவித்திரி மேலே நடக்க முடியாமல் ஒரு வீட்டின் வாசற்படியில் உட்கார்ந்தாள். அந்த வீட்டிற்குள்ளே குழந்தைகளுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கும் சத்தம் கேட்டது. ஒரு க்ஷணநேரம், 'ஒரு வேளை அப்பாதானோ?' என்று நினைத்தாள். பாட்டு வாத்தியாரின் குரல் அப்பா இல்லை யென்பதைத் தெரிவித்தது. ஆனாலும், சாவித்திரி எழுந்து உள்ளே சென்றாள். அங்கே இரண்டு குழந்தைகளுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தவரைப் பார்த்து, ''ஸ்வாமி! உங்களுக்குப் பாட்டு வாத்தியார் சம்பு சாஸ்திரிகள் விலாசம் தெரியுமா?'' என்று கேட்டாள்.

''சம்பு சாஸ்திரிகளா?'' என்று ஒரு கணம் யோசித்தார் பாட்டு வாத்தியார்.

சாவித்திரிக்குக் கொஞ்சம் உயிர் வந்தது; ''நெடுங்கரை சம்பு சாஸ்திரிகள்'' என்றாள்.

''நெடுங்கரை சம்பு சாஸ்திரிகளா? தெரியாதே, அம்மா! தபால்காரனைக் கேட்டுப் பாருங்கள்; ஒரு வேளை தெரிஞ்சிருக்கும்'' என்று சொல்லிவிட்டு, பாட்டு வாத்தியார், மறுபடியும், ''ஸா நீ பா....'' என்று ஆரம்பித்தார். அவருக்கு, பாவம், பாட்டுச் சொல்லிக் கொடுக்க இன்னும் மூன்று வீடுகள் பாக்கியிருந்தன. வழிப் போக்கர்களோடு பேசிக் கொண்டிருந்தால் காரியம் எப்படி ஆகும்?

சாவித்திரி அங்கிருந்து தட்டுத் தடுமாறிப் போய்க் கொண்டிருக்கையில் ஒரு வீட்டிலிருந்து தபால்காரன் ஒருவன் வெளியில் வந்து கொண்டிருந்தான். ''போஸ்ட்மேன்! பாட்டு வாத்தியார் சம்பு சாஸ்திரி வீடு எங்கே இருக்கு, தெரியுமா?'' என்று கேட்டாள். தபால்காரன் கொஞ்சம் வயதானவன். பிள்ளை குட்டிக்காரன். சாவித்திரியைப் பார்க்க அவனுக்குப் பரிதாபமாயிருந்தது. ஆனால், ஒரு நிமிஷம் நிற்பதற்குக்கூட அவனுக்கு அவகாசமில்லை. ''அப்படி ஒத்தரும் இந்த டிவிஷன்லே இருக்கிறதாத் தெரியலே, அம்மா! போலீஸ் ஸ்டேஷனிலே போய்ச் சொல்லு, கண்டு பிடிச்சுக் கொடுப்பாங்க'' என்று கூறிவிட்டு, மேலே நடந்தான்.

சாவித்திரி போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றாள். போகும்போதே அவளுக்கு உடம்பெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்தது. அவளுடைய நிலைமையையும் தோற்றத்தையும் கண்ட போலீஸ் இன்ஸ்பெக்டர் கூடச் சிறிது மருண்டு போனார். அவளை உட்காரச் சொல்லி, ''என்ன அம்மா விஷயம்?'' என்று கேட்டார். சாவித்திரி, ''எங்க அப்பா சம்பு சாஸ்திரியைத் தேடிண்டு வந்தேன். ஊரெல்லாம் அலைஞ்சு பார்த்தாச்சு. அகப்படலை. போலீஸிலே சொன்னா கண்டு பிடிச்சுக் கொடுப்பான்னு கேள்விப்பட்டேன்...'' என்றாள். இப்படிச் சொல்லும்போதே அவளுக்கு மூச்சு வாங்கிற்று; கண் சுழன்றது.

போலீஸ் இன்ஸ்பெக்டர் அவசர அவசரமாய், ''ஆகட்டும், அம்மா! கண்டு பிடிக்கப் பார்க்கிறேன். அதுவரையிலே நீ யாராவது தெரிஞ்சவா வீட்டிலே இருந்துக்கோ!....'' என்றார்.

''தெரிஞ்சவாளா? எனக்குத் தெரிஞ்சவாளா?'' என்று தனக்குத்தானே முணு முணுத்துக் கொண்டாள் சாவித்திரி.

இன்ஸ்பெக்டருடைய பயம் அதிகமாகிக் கொண்டிருந்தது. அவர் பரபரப்புடன், ''இந்த ஸ்திதியிலே நீ இப்படி அலையக் கூடாது அம்மா! உன் ஹஸ்பெண்டு அட்ரெஸ் என்ன'' என்று கேட்டார்.

அப்போது, சாவித்திரிக்கு, திடீரென்று என்ன வந்து விட்டது? அது அவளுக்கே தெரியவில்லை. ஜன்னி கின்னி பிறந்து விட்டதோ? அல்லது பைத்தியமே பிடித்து விட்டதோ? சொப்பனத்தில் எழுந்திருப்பது போல் எழுந்து நின்றாள். தன்னையறியாமல் சிரிப்பு வந்தது. அவளுடைய பற்கள் நறநறவென்று கடிபட்டன.

''இன்ஸ்பெக்டர்!...'' என்றாள். அவளுடைய குரலின் தொனி பயங்கரத்தை யளித்தது. ''ஹஸ்பெண்டு! ஹஸ்பெண்டு!'' என்று கூச்சலிட்டாள். ''ஹஸ்பெண்டினால் தான் எனக்கு இந்தக் கதி!'' என்று இன்னும் உரத்த குரலில் கூவினாள். நாலு அடி எடுத்து வைத்தாள். ஒரு நிமிஷம் இன்ஸ்பெக்டர், மேஜை, ஸ்டேஷன், தான் - எல்லாரும் ஒரே சுழலாகச் சுழலுவது போல் தோன்றியது. அடுத்த நிமிஷம் சாவித்திரி ஸ்மரணை இழந்து கட்டையைப் போல் தரையில் விழுந்தாள்.

சாவித்திரி பயங்கரமாய்க் கூச்சலிட ஆரம்பித்ததிலிருந்து, இன்ஸ்பெக்டர் அவளைப் பார்த்தது பார்த்தபடி ஸ்தம்பமாய் உட்கார்ந்திருந்தார். தான் ஏதாவது சொன்னாலும் செய்தாலும், அவளுடைய ஹிஸ்டீரியா அதிகமாகிவிடலாமென்றும், எப்படியாவது அவள் வெளியே போனால் போதுமென்றும் அவர் எண்ணினார். அவள் கீழே விழுந்த அப்புறந்தான் அவருக்குச் சுறு சுறுப்பு வந்தது. டெலிபோனை பரபரப்புடன் இயக்கி மீனாக்ஷி ஆஸ்பத்திரிக்கு அவசரமாய் டெலிபோன் பண்ணினார்.

(தொடரும்)

# OWNING HOME IN MADRAS IS NOW SIMPLER



## PROPOSED FLATS AT

| AKSHAYA | AISHWARYA | AASHIRWAD | ADITYA |
|---|---|---|---|
| 16 III Main Road, Nanganallur, Madras - 6 | Plot 1 & 2, 7th Main Road, Dhandeeswarar Nagar, Velacheri, Madras - 42 | No. 1, I lane, II Main Road, Trustpuram, Kodambakkam, Madras - 24 | 15/4, Jayammal St. Extn., Aminjikarai, Madras - 29 |

* *SUITABLE TO YOUR BUDGET WE OFFER DELUXE FLATS AND VILLAS AT VARIOUS DECENT AREAS IN MADRAS*
* *PAYMENT LINKED WITH THE PROGRESS AT SITE THROUGH INTEREST FREE INSTALMENTS OR CASHDOWN WITH 10% DISCOUNT.*
* *FINANCE ARRANGED FROM LEADING FINANCIAL INSTITUTIONS*
* *AESTHITICALLY, TASTEFULLY COMPLETED WITH ALL MODERN AMENITIES*
* *TIMELY POSSESSION AND QUALITY CONSTRUCTION*

CREATORS
NOT JUST BUILDERS

## ASSOCIATED BUILDERS

II FLOOR, 26, RANGANATHAN STREET,
T. NAGAR, MADRAS - 600 017. INDIA.

✆ OFF : 440210 / 440224
Res : 2345244 Fax : 2344333

# பாரதி வழிபட்ட காளி; சிவாஜி வணங்கிய அன்னை!



● அலைமகள், கலைமகள் சூழ உற்சவ காளியன்னை.

திருவண்ணாமலையின் மகிமையும், காஞ்சிபுரத்தின் பெருமையும் ஒருசேரப் பெற்ற ஒரு புனிதத் தலம் இருக்கிறதா என்ன? அதுவும் இயந்திரமயமான சென்னையில்...!

சென்னை தம்புச்செட்டித் தெருவில் உள்ள ஸ்ரீ காளிகாம்பாள் கோவிலுக்குத்தான் இத்தனை சிறப்பு!

காளிகாம்பாள் என்றதுமே சிவபெருமானுடன் வாதிட்டு, நடனக் கலையில் போட்டியிட்ட அன்னை காளியின் உருவம் தான் மனக் கண்முன் விரிகிறது. திருவாலங்காட்டில் நடனக் கோலத்தில் தலைமுடி சிலும்பி எழ, ஆவேசத்துடன் காட்சியளிப்பது போல்தான் இங்கும் காட்சியளிப்பாளோ? அல்லது கல்கத்தா காளியைப் போல அச்சம் தரும் கோலத்தில் தரிசனம் தருவாளோ என்று நினைத்துக் கொண்டே போன போது ஓர் ஆச்சரியம்!

அமர்ந்த கோலத்தில், இடது காலை மடித்து ஆசனத்தில் வைத்து, வலது பாதத்தைப் பீடத்தில் ஊன்றி, அன்பைப் பொழியும் கண்களுடன் சகல செளபாக்கியங்களையும் அனுபவிக்கும் எழில் கோலத்துடன் அன்னை. மங்களகரமான மஞ்சள் நிறப் பூமாலைகளுக்கும், எலுமிச்சம் பழமாலைகளுக்கும் நடுவே, நத்தணிந்த நாசியும் முத்தணிந்த புல்லாக்குமாக - நவயௌவன நங்கையாகக் காட்சியளிக்கிறாள் காளிகாம்பாள் என்றழைக்கப்படும் அன்னை காமாட்சி. எப்போதும் சர்வாலங்கார பூஷிதையாக - நித்ய கல்யாணியாக - மகிழ்ச்சி ததும்பும் - மந்த ஹாஸம் தவழும் சுந்தர முகாரவிந்த வதனத்துடன் கம்பீரமாக வீற்றிருக்கிறாள். எழில் வடிவமான தேவியைக் காணாத கண்ணென்ன கண்ணோ? என்று தோன்றுகிறது.

இந்தக் கோவிலில் காளிகாம்பாள் காமாட்சியன்னையின் வடிவமாகவே வழிபடப்படுகிறாள். செளகார்பேட்டையைச் சேர்ந்த நகை வியாபாரிகள் அன்னைக்கு அழகழகான ஆபரணங்கள் செய்து சாத்தியிருக்கிறார்கள். இவர்களுடைய இஷ்ட தேவதையாக விளங்குகிறாள் இந்தக் காளிகாம்பாள். அலங்காரவல்லியாகவே காட்சி தருகிறாள். விசிறி மடிப்பு விரிந்தது போல சாத்தப்பட்டிருக்கும் அங்கியின் அழகைப் பார்த்து, வெள்ளியால் செய்யப்பட்டதோ அது என்று வியக்கிறோம். சரம் சரமாகத் தொங்கும் நெய் விளக்குகளின் ஒளியில் அம்பிகையின் திரு ஆபரணங்கள் பளீர் பளீரென்று ஒளி வீசுகின்றன. தீபப் புகையின் மணம், மங்கலப் பொருள்களின் சுகந்தத்தோடு பரவி நம்மைப் பரவசப்படுத்துகிறது.

# கமலமனராஜன்

''ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம்'' என்று கம்பீரமான குரலில் சைவத் திரு சாம்பமூர்த்தி சிவாச்சாரியார் அம்பாளுடைய நாமங்களைச் சொல்லத் தொடங்கும் போது, அந்த ரீங்காரம் கருவறையில் சுழன்று வந்து, நமது காதுகளின் வழியே புகுந்து, இதயத்தில் இறங்கி விட்டமிடுகிறது. ''தாயே'' என்று அழைத்து அழைத்து இந்தச் செல்வப் புதல்வர் அர்ச்சனை செய்யும் போது அம்பிகை மனம் கனிந்து எழுந்தருளி கண் குளிர நம்மைப் பார்ப்பது போலவே தோன்றுகிறது.

**கோ**விலின் தல வரலாறு ரொம்ப சுவாரஸ்யமானது. இந்தக் கோவில் ஆரம்பத்தில் இப்போதிருக்கும் இடத்தில் இல்லை. சில நூற்றாண்டுகளுக்கு முன்பு, இன்று செயின்ட் ஜார்ஜ் கோட்டை உள்ள இடத்தில் இருந்திருக்கிறது. ஆங்கிலேயர் கோட்டை கட்டிய பிறகு, கோட்டை வளாகத்துக்குப் போய் வழிபாடு செய்வது கஷ்டமாக இருந்தது. அதனால் இடம்பெயர்ந்து தற்போது உள்ள தம்புச் செட்டித் தெருவில் கோவில் கட்டப்பட்டது!

ஆங்கிலேய அதிகாரிகள் குடிபெயர்ந்த மக்களுக்கும் உதவி செய்து கோவில் கட்டவும் வசதி செய்து கொடுத்தார்களாம். சில காலம் கோட்டைப் பகுதியில் இந்தத் தேவி இருந்ததற்குச் சான்றாக கோட்டையம்மன் என்ற பெயராலும் அழைக்கப்படுகிறாள். கோட்டையில் உள்ள வியாபாரிகள் மாகாளி அம்மனுக்கு ஆண்டுதோறும் விழா எடுக்கிறார்கள்.

பதினேழாவது நூற்றாண்டில் இந்தப் பிரதேசம் மராட்டியர் ஆட்சியில் வந்தது. ஆங்கிலேயரை எதிர்க்க வந்த மராட்டியருக்குத் தங்கள் இடத்தைக் கொடுத்து விட்டு மக்கள் வேறிடம் பெயர்ந்தனர். இந்த இடம் மராட்டா டவுன் ஆயிற்று. அப்போது மகாராஷ்டிர திலக மாகிய சிவாஜி மன்னர் இங்கு வந்தார். தாம் வழிபடும் பவானியின் அம்சமாகவே கருதி, காளிகாம்பாளைத் தரிசித்து வழிபட்டார்.

முன்பு, மீனவர்கள் இந்த தேவியை வழிபட்டு வந்தார்களாம். சிந்தூரம் பூசி வழிபட்டதால் சிவந்து விளங்கிய அம்மனைச் சென்னம்மன் என்று அழைத்தார்களாம். சென்னப்பநாயக்கருக்குக் கூட இந்த அம்மனின் பெயர்தான் சூட்டப்பட்டது. சென்னைப் பட்டினத்துக்கே இந்த அம்மனுடைய பெயர்தான் வழங்குகிறது என்றும் சொல்கிறார்கள். மும்பாதேவியின் பெயரால் பம்பாயும் காளிதேவியின் பெயரால் கல்கத்தாவும் பெயர் பெற்றது போல், சென்னம்மனுடைய பெயரால் சென்னை மாநகர் என்று பெயர் வந்தது பெருமைக்குரிய விஷயம் தான்!

**ஓ**ம்கார வடிவமான விநாயகப் பெருமானைத் தொழுது கொண்டு, உத்ஸவ காளியன்னை கொலுவிருக்கும் சந்நிதிக்கு வருகிறோம்.

அலைமகள் கலைமகள் பணி செய்வாளியான பெரியநாயகி, நவராத்திரி நாயகியாகவே விளங்குகிறாள். மகாலக்ஷ்மியும் ஸரஸ்வதியும் காளியன்னையின் இரு கண்களாக விளங்குவதாக ஐதீகம். பூதங்கள் ஐந்துமாகிப் பொறிகள் ஐந்துமாகிப் போதங் கடந்து நிற்கும் பெரிய நாயகியான காளியன்னையைப் பார்த்து, ''ஆதி சக்தி தாயே என் மீது அருள் புரிந்து காப்பாய்'' என்ற பிரார்த்தனையுடன் வலம் செய்து கொண்டு காமாக்ஷி தேவியின் வடிவமாக வீற்றிருக்கும் காளிகாம்பாள் சந்நிதியை அடைகிறோம்.

அருணாசலேச்வரர், நடராஜப் பெருமான், ஆறுமுகன் இவர்களோடு இறைவி

* அம்பாள் காளிகாம்பாளின் வெள்ளி ரதம்.



* காளிகாம்பாள் கோவில் கோபுரம்



யின் ஆட்சியில் மகிழ்ந்திருக்கும் கமடேசு வரரையும் நாம் தரிசிக்கிறோம். கமடேசு வரர் என்றால் ஆமை மீது அமர்ந்திருப்பவர் என்று பொருளாம்.

தேவியின் சந்நிதியில் ஜே! ஜே! என்று அடியார் குழாம். ஆனந்த வடிவமாக வீற்றி ருக்கும், ஓம்காரத் தலைவியைத் தரிசித்து எதிரே மேரு வடிவாக அமைந்துள்ள ஸ்ரீ சக்கரத்தில் உள்ளத்தைச் செலுத்தி நிற்கி றார்கள். ஐந்தொழில் செய்யும் வித்தகியை ஐந்து ஜோதிப் பிழம்புகளால் தீபாராதனை செய்கிறார்கள். ஐந்து பூதங்களுக்கும் அப் பாற்பட்ட பரஞ்ஜோதியான இவள் சூரிய னுக்கும் நட்சத்திரங்களுக்கும் ஒளியைத் தரு கின்ற பெருஞ்சுடர் என்று அறிவிப்பது போல் இருக்கிறது.

**ம**லர்ந்த தாமரையின் நடு மத்தியில் ஆசினையான அம்பிகை வீற்றிருப்பதும், தாமரை அறுபத்து நான்கு இதழ்களாக விரிந்து, ஒவ்வொன்றும் ஒவ்வொரு தேவ தையைத் தாங்கி நிற்பதும், அறுபத்து நான்கு தேவியரும் அம்பிகையின் பேரின்ப வடி வைத் தம் யோக சக்தியால் காண்பதும் திரு மூலருக்குத் தரிசனமாகியிருக்கிறது.

பிராகாரத்தில் ஒரு மேரு வடிவம் இருக் கிறது. சிவாச்சாரியார் அந்த மலரின் ஒவ் வொரு இதழையும் காட்டி, அதில் வீற்றி ருக்கும் தேவதையின் பெயரை இதமாகச் சொல்லும் போது, ஏதோ தம் வீட்டுக் குழந் தையைக் கூப்பிட்டு உறவாடுவது போன்ற உரிமையைக் காண்கிறோம்.

வெளிப் பிராகாரத்தில் துர்க்கையம்மன் பஞ்சலோக விக்ரகமாகக் கருணை பொழி யும் கண்களுடன் அழகு வடிவம். எதிர்ப் பக்கத்தில் சிருஷ்டிகர்த்தாவான விசுவ ப்ரும்மத்துக்குத் தனியான சந்நிதி.

**ப**க்தர்களாலும் தெய்வத்துக்குச் சிறப்பு உண்டு. சமீப காலத்தில் காளி மாதாவை வழிபட்டு ஜீவன் முக்தராக வாழ்ந்தவர் ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்ஸர். அவர் எப்போதும் "என் தாய் காளி" என்று தான் சொல்வாராம். உஜ்ஜயினி காளி காளி தாசராலும், கல்கத்தா காளி பரமஹம்ஸரா லும் மகிமை அடைந்தவர். சிவாஜி வழிபட் டது சென்னை காளிகாம்பாள் கோயில். இந்தக் கோவிலுக்கு மகாகவி பாரதியாரும் அடிக்கடி வந்து ஆவேசமாகப் பாடி மெய் மறந்திருப்பாராம்.

> "என்னும் எண்ணங்கள் யாவினும்
> வெற்றி
> எங்கும் வெற்றி எதனிலும் வெற்றி
> கண்ணும் ஆருயிர் கும்என நின்றாள்
> காளித் தாயிங் கெனக்கருள்
> செய்தாள்"

என்று இந்தக் காளித் தாயின் சந்நிதியில் நின்றுதான் பாடினாரோ?

வார, மாத, பக்ஷ, வருட உத்ஸவங்கள் எல்லாம் விமரிசையாக நடக்கின்ற கோவில் இது. மகர சங்கராந்தி ரொம்ப விசேஷம். மார்கழி மாதம் முப்பது நாட்களும் அதி காலையில் கூட்டு வழிபாடு செய்து, பொங் கல் திருநாளன்று மாலையில், நூற்றுக் கணக்கான பூக் கூடைகளுடன் அன்பர்கள் வீதி வலம்வந்து காளிகாம்பாளை புஷ்பக் குவியலால் மறைத்தே விடுவார்கள். இது ஓர் அரிய காட்சி.

இப்போது அன்பர்கள் குழாம் நிதி சேர்த்து, அம்பிகை உலா வருவதற்கு வெள்ளி ரதம் செய்திருக்கிறார்கள். பாயும் குதிரைகளுடன் நேர்த்தியாக இருக்கிறது.

"அம்பிகையைச் சரண் புகுந்தால் அதிக வரம் பெறலாம்" என்பது மகாகவியின் வாக்கு. இதற்கு மேலும் சொல்ல என்ன இருக்கிறது!

படங்கள் : கோபிநாத்

## குடியாட்சிப் பிரதிநிதியுடன் ஒரு சிறப்புப் பேட்டி!



"அரசுப் பணி ஒதுக்கீடா? -
ஒதுக்கிவிடு ஜாதிக்கே!
திருப்பி அழைக்கும் சட்டமா?
அது எதற்கு நம் நாட்டில்?
எல்லார்க்கும் கல்வியா?
ஏன் வாய்ப்பு? கேள்வி கேட்டான்!"
"ஓட்டுக்கு என்ன செய்ய?"
"பாப்பாவுக்கும் உரிமை கொடு!"
"நதிநீர் வழக்குகளை...?"
"நீட்டி விடு நாம் பிழைக்க!"
"நீதி கேட்டால் என்ன செய்வோம்?"
"நிறுத்திவிடு தீர்ப்புகளை!"
"பாதி வெற்றி! மீதிக்கென்ன?"
"பல்பொடியால் இலவசங்கள்
பல நேர்தல் வாக்குறுதி
பல போஸ்டர் விளம்பரங்கள்
பார்த்திடுவோம் ஒருகைதான்!"

- தேன்மொழி மன்னவன்



K.T.KUNJUMON
Presents
A.R.S.பிலிம் இண்டர்நேஷனல்

## பொங்கல் வெளியீடு

### இது உலகமெல்லாம் நடந்து கொண்டிருக்கும் கதை

''சிந்துநதிபூ'' படத்தைப் பார்த்தால் கணவன், மனைவியரிடையே நிலவும் பாசமும், பந்தமும், தாய் குழந்தைகளுக்கிடையே காட்டும் தாய்ப்பாசமும், தந்தை குழந்தைகளுக்கிடையே உள்ள பந்தமும், யாராலும் பிரிக்க முடியாதது என்பது நிதர்சனமான உண்மை என்பது புரியும்.





● அடுத்த...



● ...முதல்வர்?

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.
? ''ராமன் இல்லாமல் ராமாயணம் எழுதலாம்; கண்ணன் இல்லாமல் மகாபாரதம் எழுதலாம்; கண்ணகி இல்லாமல் சிலப்பதிகாரம் எழுதலாம்; கலைஞர் இல்லாமல் தி.மு.க. ஏது?'' என்று காளிமுத்து பேசியுள்ளது பற்றி?
! காளிமுத்து இல்லாமல் தி.மு.க. பிரசாரம் நடக்கலாம்! அதுவே நல்லதும் கூட!

● என். கண்ணனன், மன்னார்குடி.
? மழையால் மோசமாக உள்ள சாலைகளை அரசாங்கம் எப்போது செப்பனிடுவதாக உத்தேசம்?
! நிச்சயம் அடுத்த மழைக்கு முன்பு. அப்போதுதானே அடுத்த மழையில் மறுபடியும் பாழாக, மறுபடியும் டெண்டர் விட்டு... மறுபடியும் பணம் பண்ண முடியும்!

# அடுத்த முதல்வர் ரஜினியா? வை.கோ.வா?



● உடம்பிட்டவை...



● திருமணம் ஆச்சா?

● எஸ்.எஸ். பூங்கதிர், திருவெண்ணெய்நல்லூர்.
? அடுத்த முதல்வர் ரஜினியா? வை.கோவா?
! 'ஜெ' இல்லை என்பதாக நீங்களே முடிவு பண்ணி விடுவதா? ஊருக்கு வந்து உதைக்கப் போகிறார்கள், ஜாக்கிரதை!

● எம்.கே.எஸ். ராஜ்குமார், திருவில்லிபுத்தூர்.
? என்.எஸ்.கே. - கவுண்டமணி ஒப்பிடுக.
! காமெடி டிராக் என்று என்.எஸ்.கே. காலத்திலும் உண்டு என்றாலும் பல காட்சிகளை அவரே தயாரித்து நடித்தார். சீர்திருத்த நோக்கும் சிரிப்பூட்டும் போக்கும் கைகோத்துச் சென்றன. நாளடைவில் அவரே முழு நீளத்திரைப்படங்கள் தயாரித்து டைரக்ட் செய்யுமளவுக்கு உயர்ந்தார். இப்போதுள்ள காமெடியன்கள் டைரக்டர்களுடைய வியாபார நோக்குக்கு அடிமைப்பட்டுப் போனவர்கள். விரசமே பிரதானம். என்.எஸ்.கே. சூரியன் என்றால் கவுண்டமணி ஜீரோ வாட் பல்பு.



● சூரியன் என்றால்...



● ...ஜீரோ வாட் பல்பு

● கே. மணிகண்டன், ராஜாக்கமங்கலம்.
? ஜே.பி.சி. அறிக்கையில் நேரடியாகத் தாக்கப்படாத மன்மோகன்சிங் ராஜினாமா செய்து விட்ட நிலையில் மற்ற இரு அமைச்சர்களும் ஏன் இன்னும் ராஜினாமா செய்யவில்லை?
! அவர்கள் ராஜினாமா செய்ய இவரது ராஜினாமா கூட தூண்டுகோலாக அமையவில்லை என்பது வெட்கக்கேடுதான். போகட்டும். அவர்கள் ராஜினாமா செய்யாவிட்டால் என்ன, மந்திரி சபையில் மாற்றங்கள் என்ற பெயரில் அவர்களைப் பிரதமர் வீட்டுக்கு அனுப்பலாமே!

● பி. குமார், சேலம்.
? மீண்டும் ஆறு நாள் வேலையை அமுல்படுத்துவதை வரவேற்கிறீர்களா?
! ஐந்து நாட்களில் ஒழுங்காக வேலை செய்யும் திட்டத்தை அமுல்படுத்தினாலே போதும்; ஆறாவதான அரை நாள் தேவையில்லை. முன்னதை அமுல்படுத்தாத போது, ஏழு நாள் நாள் பணியாற்றியும் பயனில்லை.

● அ. முஸ்தபா, தக்கோலம்.
? ஸ்ரீதேவிக்குத் திருமணம் ஆகி விட்டதா? இல்லையா?
! சி.பி.ஐ. விசாரணை நடத்தி விட வேண்டும்தான்!

● ந. கந்தர், திருவனந்தபுரம்.
? ஜி.வி. விருது பெறப் போகும் சிறந்த நூலுக்கு எழுத்தாளர் எஸ். எஸ். மணி அவர் களைப் பற்றி...?
! அவர் அடிக்கடி கல்கிக்கும் கேரளச் செய்திகளைச் சுவைபடத் தருபவர் என்ற முறை

யில் இரட்டிப்பு மகிழ்ச்சி.

● லட்சுமி செங்குட்டுவன், வேலூர்.

*? அனைத்துக் கல்லூரி – பள்ளிக்கூடங்களில் 'ஜெ'யின் திருவுருவப்படம் வைக்கப்பட வேண்டுமாமே?*

! திணிக்கப்படும் புகழ் வெறுப்பைத் தோற்றுவிக்கும் என்பதோடு, கலாசாலைகளை அரசியல் நிலைக்களன்களாக்குவது பெரும் தவறு.

● கே. சோமசேகர், காவேரிப்பட்டணம்.

*? கல்கி ஆசிரியர் தினமும் பஸ்ஸில் வருகிறாராமே? உண்மையா?*

! உண்மைதான். இது ஏதோ உலக மகா அதிசயமோ, அல்லது நடக்கக் கூடாத குற்றமோ அல்ல. வயதாகி, வசதியும் மிகுந்த நாளில் கூட அமரர் கல்கி பஸ்ஸிலும் மின் ரயிலிலும் சென்று வருவதுண்டு. மக்களின் மனநிலை அப்போதுதான் புரியும். மேல்நாடுகளில் பெரிய பெரிய நிறுவனத் தலைவர்கள் கூட இப்போதெல்லாம் கார் பயன்படுத்துவதை நிறுத்தி, பொது வாகனங்களில் செல்கின்றனர்; எரிபொருள் சிக்கனம், போக்குவரத்து நெரிசல் தவிர்ப்பு, சுற்றுச்சூழல் பாதுகாப்பு போன்ற பல அம்சங்களைக் கருதி.

● கே. ஆர். தேவேந்திரன், கொளவட்டம்.

*? கருணாநிதி ஆட்சியின் தவறுகளை அவ்வப்போது மறக்காமல் சுட்டிக்காட்டி விமர்சித்த கல்கி, ஜெ. ஆட்சியின் தவறுகளை அப்போதைக்குச் சுட்டிக்காட்டி பின்னர் மறந்த மாதிரி இருப்பது ஏன்?*

! 'கருணாநிதி ஆட்சியை மேலோட்டமாக விமர்சித்த கல்கி, ஜெ. ஆட்சியில் தொட்டதற்கெல்லாம் குற்றம் கண்டுபிடிப்பது ஏன்?' என்று கேட்பவர்களுக்கு உங்கள் கேள்வியைப் பதிலாக அளிக்கிறேன். ஆக மொத்தம் கல்கி நடு நிலையில்தான் உள்ளது. படிப்பவர்களின் கட்சிக் கண்ணோட்டம்தான் வலமும் இடமுமாக விளையாடுகிறது.

● ப. இராம் முருகன், சிவகங்கை.

*? முதல்வர் பெயரில் ஜெ.ஜெ. உப்பு அறிமுகமாகப் போகிறதாமே? அதுபற்றி?*



• காளிமுத்து இல்லாமல்...

! உப்பிட்டவரை லோட்டுள்ள வரை நினைப்பார்கள் என்ற கருத்தில் இருக்கலாம்!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

*? அவதூறு வழக்குகளை ஓசைப்படாமல் வாபஸ் பெற்றிருக்கும் ஜெ செயல் குறித்து?*

! இந்த நல்லெண்ணத்தை எதிர்க்கட்சித் தலைவர்களும் பத்திரிகைகளும் பிரதிபலிக்கலாம். அவதூறு கமத்தாமலேயே குற்றம் குறைகளை எடுத்துக்காட்டலாம்.

● எஸ். குமார், காரைக்குடி.

*? புத்தாண்டில் தங்களைக் கவர்ந்த நிகழ்ச்சி?*

! அநேகமாய் எல்லாமே வருந்த வேண்டிய நிகழ்ச்சிகளாய் உள்ளதே! அஜித்சிங் அளித்த புத்தாண்டுப் பரிசு காங்கிரஸ் ஆட்சிக்கு டானிக்காக இருக்கலாம். ஆனால் நம் ஜனநாயகத்தைப் பற்றியுள்ள நோய் மேலும் தீவிரமடைந்துள்ளது. நகைச்சுவை எழுத்தாளர், பத்திரிகை ஆசிரியர் நாடோடியின் மரணம் ஏற்கெனவே நகைச்சுவைக்கு இங்குள்ள பஞ்சத்தை மேலும் அதிகரித்துள்ளது. திருக்குறளாரின் மரணம் ம.பொ.சியை ஊவிலேயே அழவைத்து விட்டது என்றால் தமிழகத்தின் இழப்பு எத்தகையது! இன்னொரு பெரிய துயரம், வட மாநிலத் தேர்தல் முடிவுகளுக்குப் பிறகும் மதத்துவப் போக்கில் மாறுதல் இல்லை என்று அத்வானி அறிவித்ததாகும்.



• 1994-ல்...



• ...வருத்தம்...

● சித்ரா கிருஷ்ண மூர்த்தி, கும்பகோணம்.

*? இசைக் கலைஞர்கள் கடவுளின் பாதம் பணிவதற்கும் அமைச்சர்கள் முதல்வரின் காலில் விழுவதற்கும் என்ன வேறுபாடு?*

! அங்கே வயது; இங்கே பதவி. இரண்டுக்கும் பொதுவாக உள்ளூர பயம்!

● சூர்ய நிலா, சேலம்.

*? இந்தியா முன்னேற ஒரு சர்வாதிகாரி தேவை என்று எழுபது சதம் மக்கள் ஒரு கருத்துக் கணிப்பில் கூறியுள்ளார்களே?*

! கருத்துக் கணிப்புக்களை முழுவதுமாக நம்புவதற்கு இல்லை என்பது ஒருபுறமிருக்க, சர்வாதிகாரம் தோன்றினால் கருத்துக் கணிப்பே நடத்த முடியாதே!



• ...தருகின்ற...



• நிகழ்ச்சிகள்

ரூ 25 பரிசு பெறுபவர் :
என். கண்ணன்,
52, காந்தி ரோடு,
மன்னார்குடி – 614 001.

உ ங் க ள் சா த னை க

# வாசகர்களுக்கு ஸ்ரீராம் நிறுவனம் வழங்கும் கட்டுரைப் போட்டியில் கலந்து கொள்ளுங்கள்.

## வெற்றிக்குத் தலை வணங்குகிறோம்.



வாசகர்களே,

நம் ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் ஏதாவது ஒன்றை அடைந்தே தீர வேண்டும் என்கிற லட்சியக் கனவு இருக்கிறது. எதிர்ப்படக்கூடிய எல்லா எதிர்ப்புகளையும் மன உறுதியுடன் சமாளித்து, உற்சாகத்துடன் செயல்பட்டு அந்த லட்சியத்தை அடைந்தவர்கள் உங்களில் பலர் இருக்கிறார்கள். அவர்களுடைய அந்த வெற்றிக்கு ஸ்ரீராம் நிறுவனம் தலை வணங்குகிறது.

அது மட்டுமில்லை. உங்களுடைய அந்த வெற்றி மற்றவர்களுக்கும் வழிகாட்டியாக இருக்க வேண்டும். அதன் மூலம் அவர்களும் உற்சாகம் பெற்று அவர்கள் வாழ்க்கையிலும் வெற்றி மலர்



**1** முதல் பரிசு:
தங்கப்பதக்கம்



**2** இரண்டாவது பரிசுகள்:
டு-இன்-ஒன்



**4** மூன்றாவது பரிசுகள்:
வாக்மென் (Walkman)

ஸ்ரீ ரா ம் சி ட் ஸ் —

## ளின் மகுடமாக...



பூக்க வேண்டும். அதற்காக நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் இதுதான்.

உங்களுடைய லட்சியம் எந்தத் துறையில் வேண்டுமானாலும் இருந்திருக்கலாம். விளையாட்டு வீரராக, உயர் பதவி அடைந்தவராக, தொழிலதிபராக உயர்ந்தவராக... இன்னும் இது போன்ற ஏதாவது ஒரு துறையில் நீங்கள் முன்னேறி, வெற்றியடைந்திருக்கலாம். உங்கள் நலனில் அக்கறை கொண்டுள்ள சிலர் அதற்கு உதவியிருந்திருக்கலாம். அந்த அனுபவத்தை முழுப் பக்கத் தாளில் இரண்டு பக்கங்கள் வரும் அளவுக்கு எழுதி அனுப்புங்கள்.

தேர்ந்தெடுக்கப்படும் கட்டுரைகளுக்குப் பரிசுகள் உண்டு. இக்கட்டுரைகள் பத்திரிகைகளில் வெளியாகும் வாய்ப்பும் உண்டு.

---

**இந்த விளம்பரம் வெளியான தேதியிலிருந்து 15 நாட்களுக்குள் கட்டுரைகள் வந்து சேர வேண்டிய முகவரி**

**ஸ்ரீராம் சிட்ஸ் &**
**இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
**பி. லிமிடெட்**
''சுப்பிரமணியம் பில்டிங்ஸ்''
1, கிளப் ஹவுஸ் ரோடு.
சென்னை - 600 002.

---

**விதிகளும் நிபந்தனைகளும்:**

அ) கட்டுரையுடன் உங்கள், பாஸ்போர்ட் அளவுள்ள, கருப்பு-வெள்ளை புகைப்படம் ஒன்றையும் அனுப்ப வேண்டும்.

ஆ) பரிசுக்குரிய கட்டுரைகளை நடுவர் குழு தேர்ந்தெடுக்கும்.

இ) தேர்ந்தெடுக்கப்படும் கட்டுரைகளைப் பொருத்தமாகத் திருத்தி, சுருக்கிப் பத்திரிகைகளில் வெளியிடும் உரிமை நிறுவனத்திற்கு உண்டு.

ஈ) கட்டுரைகள் அனைத்தும் ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் நிறுவனத்துக்குச் சொந்த மாகும். அவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது.

உ) நிறுவனத்தின் முடிவே இறுதியானது.



நூறு ஆறுதல் பரிசுகள்:
ஸ்ரீபெட் கிஃப்ட் பாக்

**ஸ்ரீராம் சிட்ஸ் &**
**இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**
நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'',
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8274451/8275536/8270400/8273932.

ADWAVE/SC/4654 TAM A

## உங்கள் வளமைக்குப் பாதை.

17th MADRAS BOOK FAIR

# வி.ஐ.பிக்களை வென்ற கல்கி வாசகர்கள்!



"ஆட்டோகிராஃப் பிளீஸ்" என்று கோகுலம் ஜனவரி இதழை நீட்டினான் சிறுவன்.

"உன் பேரு?" என்று கேட்டார் கோபுலு.

"ராமசுப்பிரமணியம்."

"அடேயப்பா! நீளமான பேரா இருக்கே" என்று சொல்லிக் கொண்டே இப்படி எழுதினார் கோபுலு :




"பார்த்தியா ரயில் மாதிரி நீளமான பேர்!" என்று கூறிக் கையெழுத்திட்ட கோகுலம் இதழைத் திரும்பத் தந்த போது சிறுவன் முகம் பூ!

இவ்வாண்டு புத்தகக் கண்காட்சியில் கல்கி ஸ்டாலுக்குப் பிரதம விருந்தினராக ஜனவரி முதல் தேதி விஜயம் செய்த கோபுலு, ஒவ்வொருவரையும் "என்ன செய்யறீங்க?" என்று அன்புடன் விசாரித்து கையெழுத்துப் போட்டுத் தந்த பரிவை அவர்களால் காலத்துக்கும் மறக்க முடியாது.

"கல்கி வாசகர்களின் ஒரு கிராஸ் ஸெக்ஷனைப் பார்த்து விட்டேன்" என்றார் கோபுலு. "ஆர்க்கிடெக்ட், இஞ்ஜினீயர், வழக்கறிஞர், டாக்டர், குடும்பத் தலைவி, முதியவர், இளைஞர், சிறுவர் என்று எத்தனை வகை!" என்று மனநிறைவோடு குறிப்பிட்டார். சுகவனம் என்று ஒரு 'மெடிகல் ரெப்' கார்ட்டூனுடன் கையெழுத்துக் கேட்ட போது, லாம்பின் பையைத் தூக்கி ஹலோ கூறும் 'மெடிக்கல் ரெப்' படத்தையே வரைந்து, அதன் கீழே, "ஹலோ டாக்டர்! சுகம் வந்திருக்கேன்!" என்று ஜோக் எழுதியும் தந்தார்!

"ஜனவரி முதல் தேதி வருகிறேன் என்று ஏன் சொன்னேன் தெரியுமா? இதே தேதியில்தான் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நான் பாக்கெட்டில் பதினாலு ரூபாய் பணத்தோடு சென்னைக்கு வந்து சேர்ந்தேன்... மாலியைப் போய்ப் பார்த்தேன்..."

அன்று ஆரம்பித்த கோபுலுவின் ஓவிய வாழ்க்கை (ஓவியம், வாழ்க்கை இரண்டுமே) பின்னடைவு காணாது முன்னேற்றப் பாதையிலேயே சென்று கொண்டிருக்கிறது. "ஆட்வேவ்" என்ற விளம்பர ஏஜென்ஸியின் தலைமைப் பொறுப்பில் உள்ள அவர், தமது வாழ்க்கையின் ஒரு விசேஷ தினத்தைக் கல்கி வாசகர்களுக்காக ஒதுக்கிய கரிசனம் நமது நெஞ்சங்களை நெகிழ வைக்கிறது.

புத்தகக் கண்காட்சியில் கல்கி நிறுவனம் ஒரு ஸ்டால் எடுத்தால் மட்டும் போதாது. அங்கு வருகிறவர்கள் உள்ளத்தில் அந்த விஜயத்தின் நினைவு என்றென்றும் பசுமையாக இருக்க வேண்டும் என்ற கருத்தில்தான் சில வி.ஐ.பிக்களை சிறப்பு விருந்தினராக அழைத்திருந்தோம். இந்த ஏற்பாடு கல்கி ஸ்டாலுக்கு மட்டுமல்ல, புத்தகக் கண்காட்சிக்கே ஒரு கலகலப்பை ஏற்படுத்தி விட்டது. புத்தகச் சந்தை நிர்வாகிகளும் கல்கி நிறுவனத்துடன் இணைந்து சிறப்பு விருந்தினரை வரவேற்று மகிழ்ந்தார்கள்.

கிரிக்கெட் வீரர் ஸ்ரீகாந்த் வந்திருந்த போது, "நீங்கள் ரிடையர் ஆனதிலிருந்து டீவியில் கிரிக்கெட் பார்க்கவே பிடிக்கலை சார்" என்று சொல்லிக் கொண்டு வந்தவர்கள் ஏராளம். ஆறு வயது முதல் அறுபது வயது வரை பலரும் வந்து அன்று ஸ்ரீகாந்த் மறுபடி செஞ்சுரி போடக் கண்டார்கள்! ஆட்டோகிராஃப் செஞ்சுரி! "உங்களைப் போல ஒரு ஓப்பனரை மறுபடி எப்ப ஸார் பார்க்கப் போறோம்?" என்று கூறி ஏக்கத்தை வெளிப்படுத்தினார்கள்.

ஸ்ரீகாந்த் ஆடும் போது அடிக்கடி சூரியனைப் பார்ப்பதைப் பலரும் கண்டிருக்கலாம். அதை மறக்காமல், ஆதித்ய ஹிருதயம் ஸ்தோத்திரப் புத்தகம் ஒன்றை கையெழுத்துக்காக நீட்டினார் ஓர் அன்பர். "எனக்கு முழுக்கவே மனப்பாடம்" என்று சொல்லிக் கொண்டே மகிழ்ச்சியுடன் கையெழுத்திட்டார் ஸ்ரீகாந்த். வேறு பலருக்கு இந்த ஸ்டாலில் அன்பளிப்பாக விநியோகிக்கப்பட்ட "கல்கி எழுப்பிய சிரிப்பலைகள்" என்ற சிறு நூல் ஆட்டோகிராஃப் வாங்க வசதியாக அமைந்தது. புத்தகச் சந்தைக்கு விஜயம் செய்பவர்களுக்கு ஞாபகார்த்தப் பரிசாகவும், வி.ஐ.பிக்களின்

கையெழுத்துப் பெற வசதியாகவும், குடும்பத்தில் அனைவரையும் சிரிப்புக் கடலில் ஆழ்த்துவதாகவும் ''த்ரீ இன் ஒன்''னாக அமைந்தது அந்தக் குட்டிப் புத்தகம்.

**க**ல்கி வாசகர்கள் அனைவருமே ஒரு குடும்பம் போலப் பழகுவதால் வி.ஐ.பிக்களுடன் மனம் விட்டுப் பேசினார்கள். ஸ்ரீகாந்திடம் ஒருவர் வேலை கூடக் கேட்டு அவர் அப்பாவை வந்து பார்க்க அனுமதியும் பெற்று விட்டார்! வேலை கிடைத்து விட்டதாக மூன்று நாளைக்குப் பிறகு வந்து சொல்லி விட்டும் போனார்!

என்றும் கேட்டுக் கொண்டார் சிவசங்கரி. ''சமத்துவம் என்ற பொதுவான அம்சத்தில், வரதட்சிணை போன்ற பல பிரச்னைகள் உள்ளடங்கியிருக்கின்றன. இவை எல்லாவற்றிலும் மாறுதல் வேண்டி நாம் புரட்சி செய்ய வேண்டும். ஆனால் அது அமைதியான வற்புறுத்தல் மூலம் - நியாயத்தை உணரச் செய்வதன் மூலம் - நடக்க வேண்டுமே தவிர, சண்டை பூசலிட்டு பகை வளர்த்துக் கொள்ளக் கூடாது; குடும்ப அமைப்பைச் சீர்குலையச் செய்து விடக் கூடாது'' என்று எச்சரித்தார்.

பல்வேறு மொழி எழுத்தாளர்களைச் சந்தித்துக் கட்டுரைகள் வடிக்கின்ற சிவசங்கரியின் ஒருமைப்பாடு பணி பலராலும் வாழ்த்தி வரவேற்கப்பட்டது. ''எனக்கு வயது எழுபத்தி ஒன்று'' என்று கூறிக் கொண்டு வந்த ஒருவர், சிவசங்கரியின் முதல் சிறுகதையை (கல்கியில் வெளியானது) நினைவுகூர்ந்து பேசிய போது சிறப்பு விருந்தினரின் கண்கள் பனித்து விட்டன. பல பரிசுகள், பாராட்டுக்கள் பெற்றாலும் முதல் கதை பிரசுரமாகும் போது ஏற்படும் இன்பத்துக்கு ஈடு இணை ஏது!











சிவசங்கரியிடமோ, பெண்களுக்குச் சம வாய்ப்பு என்பது பற்றி சரமாரியாகக் கேள்விகள். கேட்டது, பெண்கள் மட்டுமல்ல, ஆண்களும் கூடத்தான் - மிகுதியாக! அவர்களிடம், பல நூற்றாண்டுகளாக இருந்து வரும் தவறான நடைமுறைகளை ஒரே நாளில் மாற்றி விட முடியாது என்றும் சென்ற தலைமுறைக்கு இப்போது முன்னேற்றம் இருப்பதை உணர்ந்து நம்பிக்கையோடு தொடர்ந்து போராட வேண்டும்

**'டூ**யட்' பட ஷூட்டிங் இடையே கல்கி ஸ்டாலுக்கு ஒரு விசிட் அடித்தார் டைரக்டர் கே.பி. அவரிடம் கேட்கப்பட்ட முதல் கேள்வியே, ''தமிழ்ப் படத்துக்கு ஆங்கிலத் தலைப்பு ஏன்?''

''டூயட் என்பதற்கு மிகச் சரியான, பளிச்சென்று புரிகிற ஒரு தமிழ் வார்த்தை சொல்லுங்கள். டைட்டிலை மாற்றி விடுகிறேன்'' என்றார் கே.பி. யாரும் பதில்

பேசாதிருக்க, 'பளிச்'சென்று இன்னொரு கமெண்ட் பிறந்தது : ''இங்கிலீஷையும் ஒழிக்கக் கட்டிட்டா நாடு உருப்பட்டுடும்!''

''வீடியோ தியேட்டர்களுக்கு அரசு அனுமதி தரப் போகிறதே?''

''சினிமாவின் கழுத்தை முறிக்கும் இன்னொரு முயற்சி.''

''உங்கள் பட கேரக்டர்கள் பலரும் அப்நார்மலாய் இருக்கிறார்களே?''

''நார்மலாய் இருந்தால் அதிலே என்ன டிராமா இருக்கிறது? வித்தியாச கேரக்டர்கள்தான் எந்தக் கதையையுமே உருவாக்குகிறார்கள்.''

'' 'ரயில் ஸ்நேகம்' போல் ஒரு டெலி தொடர் மீண்டும் எப்போது தயாரிப்பீர்கள்?''

''இப்போதுள்ள தூர்தர்ஷன் செட்டப்பில் கிரியேட்டிவிடிக்கு மதிப்பில்லை. சினிமாக்களிலிருந்து பிட் அடித்து மெட்ரோ நடத்துகிறார்கள்.''

ரசிகர்களின் கேள்விகளுக்குப் பளிச் பதில்கள் பிறந்து கொண்டேயிருந்தன.

''சமுதாய பிரச்னைகளை விவாதிக்கின்ற படங்களை ஏன் அதிக அளவில் எடுப்பதில்லை?''

''உன்னால் முடியும் தம்பி, ஒரு வீடு இரு வாசல் போன்ற பல படங்களை எடுத்து அவார்டு வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும், நான். நீங்க படம் பார்க்க மாட்டீங்க! ஆனா, இதுபோன்ற கேள்விகளை மட்டும் கேட்பீங்க; அதுவும் பாலசந்தரிடம்!'' என்ற பாலசந்தர், 'தண்ணீர் தண்ணீர்' படத்துக்கு மத்திய அரசு விருது கிடைத்தபோதிலும் மாநில அரசு மதிக்கவில்லை என்பதைச் சுட்டிக்காட்டினார். ''கர்நாடகாவைப் பாருங்கள்; வீரப்பனைக் கதாநாயகனாக வைத்து எடுக்கப்பட்ட படத்துக்கு அவார்டு கிடைத்திருக்கிறது. அரசுக்கு எதிரான படமாக அதைக் கருதியிருந்தால் கொடுத்திருப்பார்களா?''

''வீரப்பனை ஹீரோவாக்குவது சமுதாயத்துக்கு நன்மை செய்யுமா?''

''படத்தை நாம் பார்க்காமலே பேசிக்கொண்டிருக்கக் கூடாது. 'முடிவில் போலீஸ் வந்து குற்றவாளி தண்டனை அடைந்தால் எல்லாம் சரியாப் போச்சு' என்ற கருத்து நம்மிடம் இருக்கிறது. வீரப்பன், ஏன் 'சந்தனக் கடத்தல் வீரப்பன்' ஆனான் என்று அந்தத் திரைக்கதை அலசியிருந்தால் அது சமுதாய நோக்கு ஆகாதா? யோசிக்க வேண்டும்.''

''என்னதான் இருந்தாலும் கறுப்பு வெளுப்பு படம் போல் ஆகுமா? கலர் என்பது ஒரு 'டிஸ்டிராக்ஷன்' இல்லையா?''

'' 'இது உன் தாத்தா எடுத்த படம்' என்று சொன்னால் கூட என் பேத்தி, 'பிளாக் அன்டு ஒயிட்டா? போர்!' என்று கூறி விட்டுப் போய் விடுகிறாள். அவ்வளவு ஏன், என் மனைவி கூட இன்றைக்கு 'அவள் ஒரு தொடர்கதை' பார்த்தால், என்ன சொல்கிறாள் தெரியுமா? 'நல்லாத்தான் இருக்கு; ஆனா ஏன் இவ்வளவு பேசறாங்க?' என்றுதான்! மாறி வரும் காலத்துக்கு ஏற்ப நாமும் மாற வேண்டும்; இல்லாவிட்டால் ஃபீல்டில் நிலைக்க முடியாது.''

கையெழுத்துக்களைச் சரசரவென்று போட்டுக் கொடுத்துக் கொண்டே பேசிக் கொண்டே போன பாலசந்தரிடம் ''ஒரு சாமானியனை உங்களால் நடிக்க வைக்க முடியுமா?'' என்று ஒருவர் கேட்டார்.

''நீங்க ஒரு வாய்ப்புக் கேட்கறீங்களா? அல்லது சவாலாகக் கேட்கிறீங்களா? என்பதைப் பொருத்தது'' என்றார் பாலசந்தர். ''சாமானியனையும் நடிக்க வைக்க முடியும்; ஆனால் படத் தயாரிப்பு என்று வரும் போது அதில் வேறு எத்தனையோ அம்சங்களைக் கவனிக்க வேண்டும்!''

''அரை மணி வந்து விட்டுப் போய் விடுகிறேன்'' என்று கூறியிருந்த பாலசந்தரை, ஒன்றரை மணி நேரம் சுவாரஸ்யமான பேச்சில் சிக்க வைத்தது கல்கி வாசகர்களின் சாமர்த்தியம்! தங்கள் அன்பினால் எல்லா வி.ஐ.பிக்களையுமே அவர்கள் வென்று விட்டனர்.

**கை**வலிக்கக் கையெழுத்துப் போட்டுத் தள்ளிய வைரமுத்து, இடையிடையே பேசிய ஒவ்வொரு வரியும் கவனத்தை ஈர்ப்பதாக அமைந்தது.

''நிற்கிறீர்களே, உட்காரலாமே'' என்ற உபசாரத்துக்குக் கூட, ''கவிஞன் நிற்க வேண்டும்; அவன் கவிதையும் 'நிற்க' வேண்டும்'' என்றார் வைரமுத்து! சின்னஞ்சிறு கவிதைகள் எழுதித் தந்து விட்டுக் ''காசு வாங்காமல் கவிதை'' என்று சிரித்தார். உதாரணத்துக்கு : ஒரு யுவதி, ''கண்கள் பற்றி இரண்டு வரிகள்'' என்று கேட்க,

**கண்கள் –**
**இதயத்தின்**
**இரு வாசல்கள்!**

ஹாஸ்டல் மாணவிகள் வேண்ட,

**விடுதிப் பறவைகளே! – நீங்கள்**
**விடுதலைப் பறவைகளாக மாறுங்கள்**
**வானம் பக்கம்தான்!**

''மெட்டுக்குப் பாட்டு'' என்ற வழக்கமான பல்லவியை ஒருவர் எழுப்ப, வைரமுத்து பொறுமையாக விளக்கினார் :

''மரபுக் கவிதை என்று சொல்கிறோம்; அதிலேயும் சந்தம் உண்டு. சந்தத்துக்கு ஏற்பக் கவிதை அமையும் போது ஒரு கட்டுப்

பாடு இருக்கத்தானே செய்கிறது? அன்று சந்தம்; இன்று மெட்டு. என்ன, சந்தத்தி லிருந்து மெட்டு மாறுபட்டு, கூடுதல் சுதந்திரம் எடுத்துக் கொண்டது. சில சமயம் சந்தமாகியும் விடுகிறது!''

''ஆக, ஒரு காம்ப்ரமைஸ் இருக்கிறது.''

''இல்லை என்று நான் சொல்ல வில்லை. ஆனால் ஏற்கெனவே எழுதிய கவிதைக் கருத்துக்கள்தாம் பல சந்தர்ப் பங்களில் மெட்டுக்குள் அடங்க சற்றே உருமாறி வருகின்றன. 'சின்னச் சின்ன ஆசை' கூட நான் ஏற்கெனவே கவிதை யாக எழுதியதுதான். ஆனால் சினிமாவில் இடம் பெற்ற பிறகு அது அடைந்த வீச்சு முதலில் எழுதிய கவிதைக்குக் கிடைத் ததா?''

''பாஞ்சாலி சபதத்தைப் பாரதி விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து எழுதப் போவ தாக...''

''திட்டம் இருக்கிறது. அதற்காக இன்னும் படித்துக் கொண்டிருக்கிறேன். நிறையப் படிக்க வேண்டும்.''

''புராணத்தை ஒதுக்கி விட்டு எழுதலாமே?''

''நான் புராணம் என்று பார்க்க வில்லை. பாரதியின் பாஞ்சாலி ஓர் உரு வகம்தானே. அதைத்தான் கவனிக்கிறேன். மனித உணர்வுகளைப் பார்க்கிறேன். என் கவிதைக்கு 'முடிந்த கூந்தல்' என்று தலைப்பு அமையும். பாஞ்சாலியின் கூந்தல் இன்னும் முடியப்படவில்லை என்பது என் கருத்து.''

''ஒரு அவார்ட் வாங்குகிற மாதிரி...''

''நான் இன்னும் எழுத வேண்டும்'' என்று அடக்கத்துடன் கூறிய கவிஞர், ''எழுதப் போகிறேன்'' என்று தன்னம் பிக்கையுடனும் பேசினார். அவர் குரலில் ஆதங்கம் இல்லை. உறுதிதான் தொனித் தது.

இறைவனைப் பற்றி ஏதாவது எழுதித் தருமாறு கேட்டார் ஒருவர். வைரமுத்து தெளியவில்லை. ''சட்''டென்று பிறந்தன கவித்துவ வரிகள் :

**இறைவனை நீ தேடாதே;**
**இறைவன் உன்னைத் தேடி வருமாறு**
**நடந்து கொள்!**

அந்தக் கணத்தில் ஓர் ஆச்சர்யம் நடந்தது! இறைவன் வைரமுத்துவைத் தேடி வந்து விட்டார் - அன்பளிப்பாகக் கல்கி நிர்வாக ஆசிரியர் தந்த 'கல்கி விநாயகர்' உருவில்!

– எஸ். சந்திரமௌலி
படங்கள் : பாலாஜி



''இப்ப எல்லோருக்கும் ரொம்பக் குளிர்விட்டுப் போச்சுன்னேன்!''

''என்ன சொல்றீங்க?''

''லஞ்சத்தை செக்காகக் கொடுத் தாக் கூட வாங்கிக்கறாங்களாம்!''

- கே. வி.



''நம்ம காதலைப் பத்தி உங்க அப்பா என்னதான் சொல்றாரு?''

''ஆறு மாசமாகியும் நீங்க இழுக்கி யிருக்கிற லவ் லெட்டருங்க இன்னும் ஒரு கிலோவுக்குக் கூடத் தேறலியாம்!''

- பி. ஜி. பி. இசக்கி



''கால்நடை டாக்டருக்குக் கையில நாலு காசு சேர்ந்தா என்ன பண்ணு வாரு?''

'' 'கால்நடை'யாப் போறதை விட் டுட்டுக் கார்ல போவாரு!''

- சோம. முத்துக்குமார்

# 'களவும் கற்று மற' என்றால்..?



தான் அந்தக் கல்லும் நிலை பெற்றுக் கொண்டு இருக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

இதை நிரூபிப்பதற்கு வேதங்களையும் உபநிஷதங் களையும் படிக்க வேண்டிய தில்லை. இன்றைய விஞ்ஞானி களே இதை - அதாவது அசையாப் பொருள்களுக்குள்ளும் அசைவு கள் நடைபெற்றுக் கொண்டிருக் கின்றன என்பதை நிரூபித்து இருக்கிறார்கள்.

இதைக் ''கல்லில் பிராணன் தூங்குகிறது. தாவரங்களில் அது புரண்டு கொண்டிருக் கிறது. விலங்குகளில் கனவு காண்கிறது. மனிதர்களில் விழித்து எழுகிறது. மாமனிதர் களில் மட்டுமே பிராணன் துடிப் புடன் வேலை செய்து கொண்டு இருக்கிறது'' என்று ஞான யோகியான பதஞ்சலி சொல் கிறார்.

●● ஒருவர் கையில் தீக்காயம் பட்டு விடுகிறது.

''ஐயோ! நெருப்பில் சுட்டுக் கொண்டேனே!'' என்று சொல்வ தற்குப் பதிலாக ''நெருப்பு என்னை ஒன்றும் செய்து விட வில்லை. நான் அதைத் தொட் டேன். அவ்வளவுதான். அதனால் எனக்கு எந்தத் துன்பத்தையும் கொடுத்து விட முடியவில்லை'' என்று சொல்லியும் அது கொடுக்கும் துன்பத்திலிருந்து மீண்டு விடலாம். 'தன் நினைவு ஆற்றல்' என்று இதைப் பற்றி மனஇயல் நிபுணர்களும், மனோவசிய வல்லுநர்களும் சொல்கிறார்கள். இப்படிப்பட்ட மனோவசியத்தைக் கருவியாகக் கொண்டு, எல்லா வகையான நோய்களில் இருந்தும் விடுதலை அடையலாம்.

●● மனதுக்கு அமைதியை



●● உயிர் ஒரு விஷயத்தை அனுபவிப்பதற்கு உடலையும் மனத்தையும் பயன்படுத்திக் கொள்கிறது. ரோஜா மலரை எடுத்து மோந்து பார்க்கிறோம். அப்போது நம்முடைய மனம் வேறு ஒரு சிந்தனையில் ஈடுபட்டு இருந்தால் அதன் ஒத்துழைப்பு உயிருக்குக் கிடைக்காது. அப்படி மனம் வேறு திசையில் இருக்கும் போது ரோஜா மலரின் மணத்தை உயிரானும் அனுபவிக்க முடியாது.

●● ஒரு கல் அசையாமல் கிடக்கிறது. ஆனால் அதன் உள்ளே பிராண அதிர்வு அலை கள் இருக்கின்றன. அதனால்

ஏற்படுத்துவதற்காகவே மூச்சை ஒழுங்குபடுத்துகிறோம்.

இதைத்தான் பதஞ்சலி யோகத்தின் முதல் செய்யுள் 'ஹத யோக அனுசாஸனம்' என்று சொல்கிறது.

இவ்வாறு மூச்சுக் காற்றை ஒழுங்குபடுத்துவதுதான் ஞான யோகத்துக்கும் அடிப்படையாகும்.

காரணம், மூச்சு ஒழுங்கு படும் போதுதான் சிந்தனையும் ஒழுங்குபடும். மன அமைதியும் உருவாகும்.

இதைத்தான் 'சிந்தனை உனக்குத் தந்தேன், திருவருள் எனக்குத் தந்தாய்' என்று சித்த புருஷர்கள் சொல்லுகிறார்கள்.

●● திருமணத்துக்கு முன்னால் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்வதற்கு நண்பர்களாக இருந்தே புரிந்து கொள்ளலாம். இதைத்தான் 'களவு ஒழுக்கம்' என்று நம் முன்னோர்கள் சொல்லி வந்தார்கள்.

களவு ஒழுக்கத்தின் மூலம் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்ட பிறகு பெற்றோர்களிடம் தங்கள் கருத்தைக் கூறி முறைப்படி திருமணம் செய்து கொள்வார்கள்.

இந்த ஒழுக்கத்தையே 'களவும் கற்று மற' என்ற பழமொழி வலியுறுத்துகிறது.

அதன் பிறகு அந்தக் களவு வாழ்க்கையை வேறு ஒருவரிடம் காட்டாமல் மறந்து விட வேண்டும்.

பதஞ்சலியோகம் - விளக்க உரை
சுவாமி சச்சிதானந்தா,
தமிழில் பிரதன். வெளியீடு
வானதி பதிப்பகம்,
சென்னை - 17.
விலை ரூ. 125.

– பாலன். பூங்குழலி



# தண்ணீர் கலக்காத பால் பேச்சு!



✱ அர்ஜுன் சிங் : இருட்டடிப்பு

●● திருவனந்தபுரத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் பேசிய எம்.எல்.ஏ. விஜயகுமார், ''நாம் என்னதான் ஜம்பம் அடித்துக் கொண்டாலும் அரிசி, முட்டை, பால், காய்கறி போன்றவற்றுக்கு வெளி மாநிலங்களை நம்பித்தான் இருக்க வேண்டியிருக்கிறது!'' என்று குறிப்பிட்டார். அடுத்துப் பேசிய அமைச்சர் ஜார்ஜ், ''வழக்கமான பல்லவி பாடுவதை விஜயகுமார் நிறுத்திக் கொள்ள வேண்டும்; அரிசி, காய்கறிகள் எப்படியானாலும் பால் உற்பத்தியில் நாம் இப்போது தன்னிறைவு பெற்று விட்டோம்!'' என்றார். அந்த நிகழ்ச்சி இத்தோடு முடிந்தாலும் அடுத்த நாள் நிகழ்ச்சியொன்றில் பேசிய விஜயகுமார், ''அமைச்சர் குறிப்பிட்டது போல் பாலில் நாம் தன்னிறைவு பெற்று விட்டோம் என்றால் பால் பவுடரைக் கலக்கிப் பாக்கெட் பாலாக்கி எதற்கு மக்களுக்கு விநியோகிக்க வேண்டும்? எம். எல்.ஏ.வான நான் அதிகம் பேச ஆரம்பித்தால் பல உண்மைகள் வெளி வர ஆரம்பித்து விடும்!'' என்று அமைச்சருக்குப் பதிலடி கொடுக்க, ஏக கைத் தட்டல்.

''எம்.எல்.ஏ.யின் இந்தப் பேச்சு தண்ணீர் கலக்காத பால் பேச்சு!'' என்று பலரும் கமெண்ட் அடித்தார்கள்!

●● நிதி நெருக்கடி காரணமாக பொதுப் பணித் துறை காண்ட்ராக்டர்களுக்கான பில் தொகை வழங்குவதை கேரள அரசு நிறுத்தி வைத்தது. இந்த நிலையில் புதிய காண்ட்ராக்டர்கள் நான்கு பேருக்கு மட்டும் அறுபது லட்சம் ரூபாய்க்கு செக் வழங்கியது. காரணம், அவர்கள் நால்வரும் அமைச்சர் ஒருவரின் நெருங்கிய உறவினர்கள் என்பதுதான். மற்ற காண்ட்ராக்டர்கள் இதை எதிர்த்து நீதிமன்றம் போக, ''அவர்களுக்கு முதலில் பில் தொகை வழங்கப்பட்டது தவறு. அந்த அறுபது லட்ச ரூபாயையும், திரும்பப் பெற்று, முதலில் வேலையை முடித்த காண்ட்ராக்டர்களுக்கு வரிசைப்படி வழங்க வேண்டும்!'' என்று நீதிமன்றம் அரசுக்கு உத்தரவிட்டிருக்கிறது!

●● கேரளாவிலுள்ள சேர்த்தலையில் அரசுக்குச் சொந்தமான 'எலக்ட்ரானிக்ஸ் டிரேடை' நிகழ்ச்சி நாளன்று காலை பதினொரு மணிக்குத் தொழில் அமைச்சர் துவங்கி வைப்பதாக ஏற்பாடு. அனைவரும் பத்து மணிக்கே வந்து விட்டாலும் அமைச்சர் பன்னிரண்டரை மணி வரைக்கும் வரவில்லை. இந்த நிலையில் நிகழ்ச்சிக்கு வந்திருந்தவர்கள் 12:30க்கு வாசிக்கப்படும் மாநிலச் செய்தியைக் கேட்கலாமென்று ரேடியோவைத் திருக, ''இன்று காலை பதினொரு மணிக்கு, சேர்த்தலையிலுள்ள எலக்ட்ரானிக்ஸ் டிரேடை தொழிலமைச்சர் திறந்து வைத்தார்!'' என்று செய்தி வாசித்ததைக் கேட்டதும் அதிர்ச்சியுற்றனர். செய்தியை முந்தித் தர வேண்டும்தான்! அதற்காக இப்படியா!

●● கேரள ரேடியோ இப்படியென்றால் டெலிவிஷன் வேறு மாதிரி. அண்மையில் கேரளாவில் சுற்றுப் பயணம் செய்த மத்திய அமைச்சர் அர்ஜுன்சிங், ஆறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டார். ஆயினும் அதில் ஒரு நிகழ்ச்சியைக் கூட டெலிவிஷன்காரர்கள் ஒளிபரப்பவில்லை. இது பற்றி உள்ளூர்க்காரர்கள் டெல்லியில் புகார் கொடுத்திருக்கிறார்கள்!

திருவனந்தபுரத்திலிருந்து : **எஸ். எஸ். மணி**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# நிறைவான வாழ்வை அனுபவிக்க வழி காட்டுகிறது

# அனுபவ்




குடியிருக்க வசதியான அடுக்குமாடிக் கட்டிடம்... விடுமுறையை அனுபவிக்க 'டைம் ஷேர்' உல்லாச விடுதிகள்... வரி இல்லாத நீண்ட கால வருமானத்திற்கு பழத் தோப்புகள் மற்றும் தேக்கு மரக் காடுகள்... இப்படிப் பல சிறந்த பணிகளைத் திறமையோடும் கடமை உணர்வோடும் நிறைவேற்றி, பல்லாயிரக் கணக்கான வாடிக்கையாளர்களின் நம்பிக்கையையும் பாராட்டையும் பெற்றுள்ள 'அனுபவ் குரூப்'பின் நிதிநிறுவனமான 'அனுபவ் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்' வழங்கும் இரு அருமையான சேமிப்புத் திட்டங்கள்:

## 'அனுபவ்' வைப்பு நிதித்திட்டம்

| | |
|---|---|
| மூன்றாண்டுகளுக்கு மேற்பட்ட வைப்பு நிதிகளுக்கு வட்டி | 24% |
| ஓர் ஆண்டுக்கு மேல் மூன்று ஆண்டுகளுக்கு வட்டி | 21% |
| 45 நாட்களுக்கு மேல் ஓர் ஆண்டுக்குட்பட்ட வைப்பு நிதிகளுக்கு வட்டி | 18% |

குறைந்தபட்ச டிபாசிட் ரூ. 10,000/- அதற்கு மேல் ரூ. 1000/- வீதம்.

வட்டித்தொகை பின் தேதியிட்ட மாதாந்திர காசோலைகளாக முன் கூட்டியே அளிக்கப்படும்.

## 'அனுபவ்' பத்திரம்

குறைந்த பட்ச முதலீடு ரூ. 25,000/- அதற்கு மேல் ரூ. 5000/- வீதம்.

3½ ஆண்டுகள் ஆனதும் முதலீடு செய்யப்பட்ட தொகை இரு மடங்காகத் திருப்பித் தரப்படும். முதலீடு ரூ. 25,000/- என்றால் மூன்றரை ஆண்டுகள் முடிந்தவுடன் கிடைப்பது ரூ. 50,000/-

## அனுபவ் ஃபைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மென்ட்ஸ்


அனுபவ் சென்டர் 11, சோமசுந்தரம் தெரு, தி. நகர், சென்னை - 600 017.
ஃபோன்: 8254155/8282833/8283316/8282629 ஃபேக்ஸ்: 044-8284967


EFFICIENT

'அனுபவ்': நிம்மதியான வாழ்க்கைக்கு நம்பகமான அடித்தளம்.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka



# பாரம்பரியச் சுவைக்கு ஈடில்லை, இணையும் இல்லை.

லியோ காபி — தோட்டப் பயிர்களில் 60 ஆண்டுகளுக்கு மேல் காபி பயிரிடுவதில் முன்னணியில் இருப்பவர்கள் வழங்கும் தரமான காபி

காபிக் கொட்டைகள் மிகவும் கவனமாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. நன்கு வறுத்து, தங்கள் முன்னிலையில் நவீன கிரைண்டர் மூலம் உடனுக்குடன் அரவை செய்து தரப்படுகிறது. செறிவான தூய காபியின் அசல் மணமும், சுவையும் மாறாமல் அப்படியே இருக்கவும் விஷேச கவனம் செலுத்தப்படுகிறது.

இவையும் கிடைக்கின்றன : எங்களுடைய சொந்தத் தோட்டத்தில் விளைந்த மிளகு மற்றும் ஏலக்காய் — தோட்டத்துப் புதுமையுடன்.....




லியோ

சுத்தமான ஃபில்டர் காபி

Insight 3383

நிர்வாக அலுவலகம்:
லியோ காபி கிரைண்டிங் ஒர்க்ஸ்,
16, தெற்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை 600 004.